REGD. No. TN-MS (C) 244 ❋ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 6 பக்கம் விலை 40 காசு



**பலம்**

நாட்டிலே நல்லறிவு பரவினுல்தான் அடிப் படை பலமாக இருக்கும்,

—பேரறிஞர் அண்ணு

# அண்ணு

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**பெருமை**

உனக்குப் பெருமை வேண்டுமானுலும் உற்சாகம் வேண்டுமானுலும், பிற மனிதனுக்குத் தொண்டு செய்வதில் போட்டி போடுவதன் மூலம் தேடிக்கொள்.

— தந்தை பெரியார்



● மலர்: 6 சென்னை 17—10—1981 சனி வெளியூர் 18—10—1981 ஞாயிறு இதழ்: 2 ●

## மக்களே கழகம், கழகமே மக்கள் என்பது நிரூபணமான காட்சி

### புரட்சித்தலைவரின் விருப்பத்தை நிறைவேற்ற போட்டிபோட்டு நிதியளித்த மாட்சி

### வாரிவழங்கிய வள்ளலை வாழ்த்தி வாரிவழங்கிய சென்னை மாநகர்

### கழகத் தியாகிகளுக்கு உதவிட

# காணிக்கை குவிந்தது — உண்டியல் நிறைந்தது

## சென்னை படைத்த மகத்தான சரித்திரம்

சென்னை, அக். 17—கழகத் தியாகிகளின் குடும்பங்களுக்கு உதவிட வேண்டும் என்ற புரட்சித்தலைவரின் விருப்பத்தை நிறைவேற்ற சென்னை மாநகரத்து மக்கள் தங்கள் காணிக்கையைத் தங்குதடையின்றி தாராளமாகச் செலுத்திஞர்கள்.

கழகம் பிறந்தநாளான இன்று நடைபெற்ற இந்த உண்டியல் வசூல்; கழகமே மக்கள், மக்களே கழகம் என்பதை நிருபிப்பதாக இருந்தது.

அண்ணனின் கொள்கையை காக்க-கழகத்தை வளர்க்க கண்ணீரையும், செந்நீரையும் கொட்டிய தியாகிகளுக்கு உதவக் கழகம் முதல் கட்டமாக சென்னை நகரில் மக்களிடம் சென்று உண்டியல் வசூல் செய்தது.

காழ்ப்பு உணர்ச்சியும், கயமைக் குணமும் கொண்ட கருத்து குருடர்களின் தாக்குதலுக்கு ஆளாகி கழகத்திற்காக இன்னுயிர் ஈந்தவர்கள், அங்கங்களை இழந்தவர்களது குடும்பத்திற்கு உதவக்கழகம்திட்டமிட்டது.

### தமிழகம் கண்ட வரலாறு

எந்தப் பிரச்னை வந்தாலும், என்னகஷ்டம்வந்தாலும் மக்களிடம் செல்வது புரட்சித்தலைவரது வாடிக்கை. இதுதமிழகம் கண்ட வரலாறு.

அந்த அடிப்படையில் கழகத்திற்காக தியாகம் புரிந்த தியாக தீபங்களின் குடும்பங்களுக்கு உதவி அவர்களின் கண்ணீரை துடைக்கமுற்பட்டுள்ளது. மக்களை நம்பியே கழகத்தை துவக்கி அண்ணுவின்கொள்கைகளை லட்சியங்களை அமுல் படுத்தி அண்ணுவின் ஆட்சியை தொடர்ந்து நடத்திவரும் புரட்சித்தலைவர் கழகத்தியாகபிம்பங்களின் குடும்பத்திற்கு உதவ மக்களிடம் செல்ல முற்பட்டார்.

மக்களிடம் துண்டேந்தி மடிப்பிச்சைப் பெறுவது கழகம் தொடங்கிய நாளிலிருந்து நடைபெற்று வருகிறது.

அந்த அடிப்படையில் இன்று சென்னை நகரில் 14 தொகுதிகளிலும் கழகத் தலைவர்களும் முன்னணியினரும் உண்டியல் ஏந்தி வந்தனர்.

நகரப் பெருமக்கள் பெருத்த ஆர்வம் கொண்டு திரளாகக் காத்து நின்று முண்டியடித்துப் போய் உண்டியலை நிரப்ப முற்பட்டனர்.

பொதுமக்கள் மலர்ந்த முகத்துடன் காசுகளையும், ரூபாய் நோட்டுகளையும் எல்லாஇடங்களிலும் வாரி வாரி வழங்கினர்.

புரட்சித்தலைவர் பெரிதும் மதிக்கும் தாய்க்குலத்தினரும் ஆண்

(2-ம் பக்கம் பார்க்க)



சென்னை மயிலாப்பூர் தொகுதியில் கழகத் தோழர்களின் குடும்பங்களுக்கு உதவிட அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், குடிசை மாற்று வாரியத் தலைவர் டி.கே.கபாலி, வலம்புரிஜான் மற்றும் கழகத் தோழர்கள் உண்டியல் ஏந்தி நிதி வசூலித்தனர்.

தியாக தீபங்களே - உங்கள்

## திக்கு நோக்கி வணங்குகிறோம்!

உலகத்தின் வரலாற்றில் எந்த ஒரு நாட்டிலும் எந்த ஒரு நூற்றுண்டிலும், எண்ணி முடிப்பதற்குள் ஒரு கட்சி ஆட்சிப் பொறுப்பிற்கு வந்ததில்லை.

சில நாடுகளில் இராணுவப் புரட்சி நடப்பதற்கே கூட இதைவிட அதிகமான காலம் பிடித்திருக்கிறது.

புரட்சித்தலைவர் கண்ட பேரியக்கம் மிகமிகக் குறுகிய காலத்தில் கோட்டையைப் பிடித்துவிட்டது.

பொதுவாக 'தர்மம்' இறுதியாகத்தான் வெற்றி பெறுகிறது.

புரட்சித்தலைவர் தலைமை தாங்கிய சத்திய வேள்வியில் தர்மமே முதலில் வென்றது.

தர்மத்திற்கு முதல் வெற்றி கிடைத்தாலும், புரட்சித்தலைவரை நம்பி வழிநடந்தவர்கள் ஒரு நூருண்டு காலக் கொடுமைகளை ஏற்ருர்கள்.

இயக்கக் குழந்தை பிறந்ததற்கும் அது கொடி பிடித்து இயங்க ஆரம்பித்ததற்கும் இடைவெளி மிகக் குறுகலானது. இருந்தாலும், அந்த மிகக் குறுகிய நாட்களில் அவர்கள் காடு மலைகளை, காட்டாறுகளை, கல்லுக்குள் பதுங்கும் கண் கொத்திப் பாம்புகளைச் சந்திக்க வேண்டி வந்தது.

உயிர்களை உடைமைகளை உரிமைகளை இழந்த பிறகு இந்த வீரர் கூட்டம் ஆட்சியைப்பிடித்தது.

-: வலம்புரிஜான் :-

சதி, சாகசம், சூழ்ச்சி இப்படிப்பட்ட அரசியல் சித்து விளையாட்டுக்களின் அவசியமில்லாமல் மக்களே கோட்டைக்குள் புரட்சித்தலைவரைக் கொண்டு சென்ருர்கள்;

திராவிட இயக்கத்தின் அரசியல் வெற்றிக்கான ஆரம்ப சூத்திரம் புரட்சித்தலைவரிடத்திலே தான் இருக்கிறது என்பதை நாடு கண்டு கொண்டது.

ஆட்சிக்காக உழைத்தவர்கள் அரசியல் லாபத்தை பங்கு போடுவது எல்லா நாடுகளிலும் நடக்கிறது.

புரட்சித்தலைவரின் புனிதச் சேனையிலே மாத்திரம் நடைமுறை வேருக இருந்தது.

கர்ப்பம் தரித்தவள் வயிற்றில் பூத்த மலர் வாடக் கூடாது-என்பதற்காக வாயைக் கட்டுவது போல இந்த மாதாக்கள் தங்கள் ஆசைகளுக்கு விலங்கிட்டுக்கொண்டார்கள்.

'உனக்கு என்ன பெருமை'? என்று வேறு எந்தக் கட்சித் தொண்டனைக் கேட்டாலும் அவன் பதிலுக்

(2-ம் பக்கம் பார்க்க)

## முத்துராமன் உடல் தகனம்: புரட்சித்தலைவர் கண்ணீர் அஞ்சலி

சென்னை, அக். 17— இயற்கை எய்திய நவரசத்திலகம். கலைமாமணி முத்துராமன் அவர்களின் உடல் தகனம் இன்று நடந்தது. முன்னதாக அன்னரது உடலுக்கு மலர் வளையம் வைத்து கண்ணீர் மல்க அஞ்சலி செலுத்திஞர் முதல்வர் புரட்சித்தலைவர்.

ஊட்டியில் முத்துராமன் இயற்கை எய்திய செய்தி அனைவர் உள்ளத்தையும் உலுக்குவதாக இருந்தது.

அனைவரிடமும் சிரித்துப் பேசி அன்புடன் பழகும் அந்தப் பண்பாளரின் மறைவுச் செய்தி கேட்டு முதல்வர் புரட்சித் தலைவர் அதிர்ச்சி அடைந்தார். முதல்வர் உட்பட அனைத்துத் தரப்பினரும் இரங்கல் தெரிவித்தனர்.

முத்துராமனின் உடல் ஊட்டியிலிருந்து காரில் சென்னைக்குக் கொண்டு வரப்பட்டது.

பின்னுல் மற்ருெரு காரில் நடிகர் சிவகுமார் திருப்பூர் மணி மற்றும கலைஞர்கள் வந்தனா.

இன்று அதிகாலை 3.10 மணிக்குத்தான் உடல் சென்னை வந்து சேர்ந்தது. அவரது உடலைப்பார்த்து குடும்பத்தினர் கதறி அழுதார்கள். எங்கும்ஒரே சோகமயமாக இருந்தது. உடல்வந்தஉடன்பரமகுரு, எஸ். பி. முத்துராமன், பாபு, நாகேஷ், ராஜேஷ், காரைக்குடி நாராயணன், சத்தியகலா ஆகியோர் மாலை அணிவித்து அஞ்சலி செலுத்தினர்.

### முதல்வர் அஞ்சலி

முதல்வர் புரட்சித்தலைவர் காலை 10.45-க்கு வந்து மலர் வளையம் வைத்துக்கண்ணீர் மல்க அஞ்சலிசெலுத்திஞர்முத்துராமன் குடும்பத்தினருக்கு புரட்சித்தலைவர் ஆறுதல கூறிஞர்.

மேலவைத் தலைவர் ம. பொ. சி. பேரவைத் தலைவர் ராசாராம் அமைச்சர்கள் கே. ஏ. கே. எஸ். டி. எஸ். ஆர் எம் வீ, மற்றும்

(2-ம் பக்கம் பார்க்க)



## கண்ணீரில் நனைந்த நாட்கள்

அனைத்திந்திய அண்ணு தி. மு. கழக வரலாற்றில்
உருணடோடிப்போன ஒன்பது ஆண்டுகளில்
பார்வையாளராக இல்லாமல் பங்காளிகளாக இருந்து
பணியாற்றிய பத்தரை மாற்றுத் தங்கங்கள்
உதிரம் சிந்திய உத்தம தியாகிகள் —
தியாக தழும்பேற்றுக் கொண்ட தினவெடுத்த
தோள்கள் தூக்கிய மன்ற மறவர்கள்
வெங் கொடுமை சாக்காட்டில் வெந்து மடிந்த
எம் குலக் கொழுந்துகள் ... ... ...
இலையுதிர் காலமொன்றில் தலை கவிழ்ந்து நின்ற
இந்தத் தமிழகத்தை வசந்தத்தின் வளர் பிறையாக்க
அரும்பாடுபட்டு, அல்லல் மேற்கொண்டு
கல்லறை காவியமாகிய கழக கண்மணிகள்
இவர்களைப் பெற்றெடுத்த தாய் தந்தையர்கள்
உடன் பிறந்த அண்ணன் தம்பி அக்காள், தங்கைகள்,
இவர்கள் வீதியில் நடந்து வருகின்ற
பாதங்களில் படுகின்ற தூசுக்கு ... ... ...
**பத்தாம் ஆண்டு துவக்க நாளில் எங்கள்**
வீர வணக்கத்தை தலைவணங்கி
நன்றியோடு காணிக்கையாக்குகிறோம்.

**கோவைத்தம்பி** எம். எல். ஏ.
கோவை மாவட்ட அமைப்பாளர்

# காணிக்கை குவிந்தது... (முதல் பக்கத் தொடர்ச்சி)

களோடு போட்டிபோட்டு நோட்டுக்களையும் நாணயங்களையும் உண்டியலில் நிரப்பினார்கள்.

கழகத்திற்கு ஏற்படும் கஷ்டங்களை தங்கள் கஷ்டமாகக் கருதும் மக்கள் புரட்சித்தலைவரது எண்ணங்களை நிறைவேற்ற ஆர்வத்துடன் செயல்பட்டனர்.

தலைமைக்கழக ஏற்பாட்டின் அடிப்படையில் நகரில் 14 தொகுதிகளில் இன்று உண்டியல் வசூல் மும்முரமாக நடைபெற்றது.

## மக்களே கழகம்

மக்கள் காட்டிய இந்த ஆர்வத்தைப் பார்த்த போது மக்களே கழகமாக. கழகமே மக்களாக இருக்கிறது என்பதற்கு மற்றுமோர் நிலைச் சான்றாக காணப்பட்டது.

பொறுமையும் - பொச்சரிப்பும் கொண்ட மாற்றாரின் அநாகரிக வன்முறைச் செயல்களால் கழகத் தோழர்கள் பலர் தங்கள் இன்னுயிரை ஈந்துள்ளனர். பலர் கை, கால்களை இழந்துள்ளனர்.

இந்தத்தியாகசீலர்களது குடும்பத்தினர் கண்ணீரை துடைக்கக்கழகம்முற்படும் போது பல லட்சம் கரங்கள் இதற்கு உதவ வந்துள்ளது காண்பதற்கரிதாக இருந்தது.

புரட்சித்தலைவரை நம்பிக் கெட்டவர்கள் இல்லை. நம்பாமல் கெட்டவர்கள் இருக்கலாம்.

நம்பிவந்த தொண்டர்களது நலன் காக்கும் பொன் மனம் கொண்ட தலைவரது எண்ணத்தை ஈடேற்றி வைக்க மக்கள் மிகுந்த ஆர்வம் காட்டினர்.

வீதி எல்லாம் மக்கள் வெள்ளம். அவர்கள் விழி எல்லாம் மகிழ்ச்சி வெள்ளம். அவர்களது கரங்களில் எல்லாம் நிதி வெள்ளம்.

## பெண்களின் ஆர்வம்

பொது மக்கள் தாய்க்குலத்தினர், பாட்டாளிகள், மாணவர்கள் சிறுவர்கள் அனைத்துத்தரப்பினருமே கழகத் தலைவர்களிடம் காசுகளையும், நோட்டுக்களையும் மகிழ்ச்சியுடன் ஈந்தனர்.

உண்டியல் வசூலினை ஒட்டி அமைச்சர் பெருமக்கள், தலைவர்கள் முன்னணியினர் வந்த வழியெல்லாம் கழகத் தோரணங்கள், கொடிகள், பதாகைகள் கட்டி வரவேற்றனர்.

## திறந்த ஜீப்பில்...

திறந்த ஜீப்பில் அமைச்சர்கள், தலைவர்கள் செல்ல அதனைத் தொடர்ந்து கழகத்தோழர்கள் கொடி ஏந்தி கோஷமிட்டு அணி அணியாகச் சென்றனர்.

உண்டியல் வசூல் ஊர்வலம் வருமுன்பே ஒரு ஜீப்பில் மைக் வைத்து அறிவித்தபடி தோழர்கள் சென்றனர்.

எந்தப் பிரச்சினை வந்தாலும் மக்களிடம் வரும் புரட்சித் தலைவர் கழகத் தியாகிகளது குடும்பங்களை காக்க நிதி கேட்டு அனுப்பியிருக்கிறார் பொது மக்களே அள்ளி வழங்குங்கள் வாரி வழங்குங்கள் என்று கேட்டபடி சென்றனர்.

சுள் என்று அடித்த வெயிலையும் பொருட்படுத்தாமல் மக்கள் எல்லா இடங்களிலும் காத்திருந்து நிதி அளித்தனர்.

எல்லா இடங்களிலும் அந்த அந்த தொகுதி அமைப்பாளர்கள், கழக நிர்வாகிகள் கழகக் கொடியோடு வந்தனர். சைக்கிள்களிலும் தோழர்கள் சென்றனர்.

மகளிர் பிரிவினர்சீருடை அணிந்து அணிவகுத்துச் சென்றனர்.

## மயிலை காட்டிய ஆர்வம்

மயிலைத்தொகுதி கழகத்தின் கற்கோட்டை. துரோகிகளை ஓட ஓட விரட்டிய தொகுதி.

இந்த தொகுதியில் கழகப் பொருளாளர் பண்ருட்டி ராமச்சந்திரன், டி. கே.கபாலி எம்.எல்.ஏ. வலம்புரிஜான் ஆகிய மூவரும் திறந்த ஜீப்பில் வந்தனர்.

திருவான்மியூர் ஜெயந்தி தியேட்டர் அருகில் இருந்து உண்டியல் வசூல் ஊர்வலம் புறப்பட்டது.

அமைச்சர் பண்ருட்டியார் வருமுன்பே கழகத் தோழர்களும், பொது மக்களும் பெருந்திரளாகக் கூடி இருந்தனர்.

அண்ணனின்புகழ்வாழ்க புரட்சித்தலைவர் வாழ்க என்ற கோஷங்கள் அதிர்வெடியென முழங்க ஊர்வலம் புறப்பட்டது.

புறப்பட்ட இடத்தில் காத்திருந்த மக்கள் ஜீப்பில் இருந்த அமைச்சரின் உண்டியலில் நிதியை செலுத்த முட்டி மோதி வந்தனர்.

கலகலவென காசுகள் ஓசையிட காசுகளை வாரி வாரி வழங்கினர்.

எல்.பி. ரோடு, கிண்டி ரோடு, அடையாறு பாலம் வழியாக, மயிலை மாட வீதிகள், முண்டககண்ணி அம்மன் கோவில் தெரு, டாக்டர் அம்பேத்கார் பாலம், பஜார் வீதி, சாந்தோம், பட்டினப்பாக்கம், மந்தைவெளி, செயின்ட்மேரீஸ் ரோடு, டிசில்வா ரோடு, லஸ்சர்ச் ரோடு வழியாக வந்து மயிலை மேற்கு மாட வீதியில் ஊர்வலம் முடிவடைந்தது.

எல்லாத் தெருக்களிலும் மக்கள் திரளாககூடிநின்று வரவேற்றனர். வழியெங்கும் கழகதோரண அலங்காரம் செய்யப்பட்டு இருந்தது. மாட வீதியில் தாய்மார்கள் தங்கள் இடுப்பில் இருந்த குழந்தைகளது கைகளில் ரூபாய் நோட்டுகளை உண்டியலில் போட வைத்தனர்.

அந்த மழலைச் செல்வங்களும் மகிழ்ச்சியோடு உண்டியலில் காசுகளையும், நோட்டுகளையும் போட்டனர்.

## வரலாறு படைத்த ஆயிரம் விளக்கு

கழக வரலாற்றில் ஆயிரம் விளக்கு தொகுதிக்கு என தனி ஒரு வரலாறு உண்டு

இந்த தொகுதியில்தான் முதலவர் புரட்சித்தலைவர் அநீதி அரக்கனை சாய்க்க நீதிக்கு முதல் முழக்கமிட்டார்

புரட்சித்தலைவரது அருமைத் தம்பி கே.ஏ.கே.யைவெற்றி பெற வைத்த மக்கள் புரட்சித்தலைவரது பாசப் பிணைப்புக்கு கட்டுபட்டவர்கள்.

திறந்தஜீப்பில் கே ஏ கே எஸ்.ஆர். ராதா எம்.எல்.சி. பா. அங்கமுத்து ஆகியோர் சென்றனர்:

கொள்கை மறவர் கூட்டம் பின்தொடர ஏறு நடை போட்டுச் சென்றனர்.

அமைச்சர் கே. ஏ. கே. யின் வீட்டு வாசலில் இருந்து ஊர்வலம் புறப்பட்டது,

கவுடியாமடம் சாலை, பீட்டர்ஸ் சாலை, மணிக்கூண்டு, ஒயிட்ஸ் ரோடு, அண்ணாசாலை, ஆயிரம் விளக்கு மார்க்கெட், கோபாலபுரம், ஆழ்வார் பேட்டை, எல்டாம்ஸ் சாலை, ஜெமினி நுங்கம்பாக்கம நெடுஞ்சாலை, வள்ளுவர்கோட்டம், கோடம்பாக்கம் நெடுஞ்சாலை வழியாக ஜண்டா தோட்டத்தில் உண்டியல் வசூலை முடித்தனர்.

இந்தப்பகுதியில் உள்ள வியாபாரிகள் பொது மக்கள் முஸ்லிம்கள் அனைவரும் நிதியை வாரிவாரி அளித்தனர்.

கோபாலபுரம் மற்றும் பல பகுதிகளில் மக்கள் காட்டிய ஆர்வத்தைப் பார்த்த மாற்று முகாம் மருண்டு திகைத்தது. மனதுக்குள் புழுங்கிச்சலித்தது.

## துறைமுக தொகுதி

தங்கத்தலைவனது ஆணையை ஏற்று உண்டியல் வசூல் செய்ய தம்பியர் கூட்டம் துறைமுகம் தொகுதியில் தங்கசாலை மணிக்கூண்டு அருகே காலையில் இருந்து குவியத் தொடங்கியது.

அமைச்சர் எஸ் டி எஸ், டி கே சீனிவாசன்,எம் எஸ் அப்துல்காதர், ஏ வி கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் மக்களின் வாழ்த்தொலி முழக்கத்துடன் உண்டியல் வசூலைத் துவக்கினார்கள்.

சவுகார்பேட்டை, சைனபஜார் கோவிந்தப்ப நாயக்கன் தெரு, கிடங்கு தெரு, கொத்தவால் சாவடி பஜார், ஆச்சாரப்பன் தெரு தாதாமுத்தியப்பன் தெரு, மண்ணடிபஜார் வழியாக ராஜாஜி சிலையை வந்து முடிந்தது.

## பாட்டாளியின் கூட்டாளி

சிறியசிறிய தெருக்களில் எல்லாம் ஊர்வலம் வந்த போதுமக்கள்வெள்ளத்தில் மிதந்து செல்லும் படகு போல தலைவர்கள் வந்த வண்டி வந்தது.

முஸ்லிம்கள், வடநாட்டினரும் இந்தப்பகுதிகளில் திரண்டுவந்து நிதிவழங்கினார்கள்.

முஸ்லிம் தாய்மார்களும் களும் காசுகளை வழங்கினார்கள்.

பாட்டாளியின் கூட்டாளியானப் புரட்சித் தலைவரிடம் பக்திகொண்ட பாட்டாளி வர்க்கத்தினர் காசுகளை வழங்கிய காட்சி கண்ணீர் விடத்தக்க வகையில் நெஞ்சை உருக்கியது.

## தியாகத்தை மதிக்கும் தியாகராயர் நகர்

வெள்ளுடை வேந்தர் பெயர் கொண்ட தியாகராயர் தொகுதி திராவிட வரலாற்றில் பெரும் பங்கு கொண்ட பகுதியாகும்.

தி நகர் பேருந்து நிலையம் அருகே இருக்கும் அய்யாசிலையில் இருந்து உண்டியல் வசூல் துவங்கியது.

அமைச்சர் ஆர்.எம்.வீ. டி. வி. நாராயணசாமி, கே.குப்புசாமி எம்.எல்.ஏ. கு. க. செல்வம் ஆகியோர் உண்டியல் வசூல் செய்ய திறந்த ஜீப்பின் வந்தனர்

அலங்கரிக்கப்பட்ட இரு குதிரைகளில் கழகத தொண்டர்கள் செல்ல, மோட்டார் சைக்கிளில் கழகக்கொடி ஏந்திச் சென்றனர்.

தியாகராய நகர் திராவிடர் கோட்டை - அது கழகக்கோட்டை - புரட்சித்தலைவரது கோட்டை - என்பதை மக்கள் கூட்டம் எல்லா இடங்களிலும் காட்டியது. அள்ளித்தரும் வள்ளல்களாக அந்த மக்கள் காசுகளையும், நோட்டுகளையும் அள்ளி அள்ளி வழங்கினர். உஸ்மான் ரோடு, ரங்கநாதன் ரோடு, மாட்லிரோடு, பனகல் பார்க், பாண்டிபஜார், கோடம்பாக்கம் மேம்பாலம், ஆற்காடு சாலை வழியாக வடபழனி பேருந்து நிலையத்தில் ஊர்வலம் முடிவடைந்தது.

## எழும்பூர் காட்டிய எழுச்சி

கழக உண்டியல் வசூலை ஒட்டி எழும்பூர் தொகுதி எழுச்சிக்கோலம் பூண்டிருந்தது.

அமைச்சர் அரங்கநாயகம் ஜேப்பியார் எம். எல். சி. ராஜபாண்டியன் ஆகியோர் திறந்த வண்டியில் செல்ல உண்டியல் வசூல் தீவிரமாக நடைபெற்றது.

ஹாரிஸ்ரோடில்துவங்கிய வசூல் ஊர்வலம் நாராயணநாயக்கன்தெரு, லப்பைதெரு, எழும்பூர் நெடுஞ்சாலை, பாந்தியன சாலை, ஜெகந்நாதபுரம், மேடக்ஸ்ரோடு,டவுட்டன் அஷ்டபுஜம் ரோடு, ஸ்டராஹன்ஸ்ரோடு,பிரிக்லின் ரோடு, டாணா தெரு வழியாக வசூல் ஊர்வலம் சென்றது.

## ராயபுரம்

மீனவப் பெருமக்களும், பாட்டாளி மக்களும் நிறைந்த ராயபுரம் தொகுதியில் உண்டியல் வசூல் சிறப்பாக நடந்தது.

அமைச்சர் காளிமுத்து இரா. மோகனரங்கம் எம். பி. முசிறிப்புத்தன் எம். எல். ஏ. இ மதுசூதனன் ஆகியோர் ஜீப்பில் செல்ல அண்ணா சாலயில் இருந்து வசூலைத் தொடங்கினர்.

சிமெண்டரி சாலை, திருவொற்றியூர் நெடுஞ்சாலை, எஸ் என் கார்டன் ஜி. ஏ. ரோடு, சிங்காரத் தோட்டம், எம். எஸ் கோயில் தெரு, கிழக்கு மாதா கோயில் தெரு, கல்மண்டபம் ரோடு, ஆல்பர்ட் காலனி, எஸ். என். செட்டித் தெரு வழியாக குப்பம் ரோடில முடிவடைந்தது.

## திருவிழா போல திருவல்லிகேணி

கழக உண்டியல் வசூலை ஒட்டி திருவல்லிக்கேணி பகுதி திருவிழாக் கோலம்பூண்டிருந்தது

கஸ்தூரிபாய் காந்தி மருத்துவமனையிலிருந்து உண்டியல் வசூல் துவங்கியது

அமைச்சர் குழந்தைவேலு, துரை கோவிந்தராசன், திருவை அண்ணாமலை ஆகியோர் நிதி வசூலித்தனர்.

பார்த்தசாரதியின்பவனியைப்பார்க்க காத்திருப்பது போல மக்கள் காத்திருந்து கழகத்திற்கு நிதி அளித்தனர்.

பாரதிசாலை, காயிதேமில்லத்சாலை, டாக்டர் பெசன்ட்சாலை, இருசப்பகிராமணிதெரு, மீர்சாகிப்பேட்டை மார்க்கெட், வி.எம்.சாலை, அவ்வைசண்முகம் சாலை, ராயப்பேட்டை நெடுஞ்சாலை வழியாக தண்ணீர் துறை மார்க்கெட் அருகில் முடிவடைந்தது.

## பூங்காநகர்

பூங்காநகர் தொகுதியில் அமைச்சர் ராகவானந்தம், வை. பெருமாள், டி.ஹிராசந்த் எம் பி ஆகியோர் உண்டியல் வசூல் செய்தனர்.

சென்ட்ரல் ரயில் நிலையம் அருகில் இருந்து புறப்பட்ட வசூல் ஊர்வலம் கந்தசாமிகோயில், பூக்கடை,என்எஸ்சிபோஸ் ரோடு, வால்டாக்ஸ்ரோடு யானைக்கவுனி, மிண்ட், சால்ட் குவார்ட்டர்ஸ், புளியந்தோப்புநெடுஞ்சாலை சூளை, பெரியமேடு வழியாக மூர்மார்க்கெட் நேரு ஸ்டேடியம் அருகே வந்து முடிவடைந்தது.

உழைக்கும் வர்க்கம் இந்தப் பகுதிகளில் கையில் இருந்த காசுகளை எல்லாம் உண்டியில் இட்டனர்.

## அண்ணாநகர்

அண்ணாவின் திருப்பெயர் கொண்ட அண்ணாநகர் தொகுதி கழக வரலாற்றில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்திய தொகுதி.

அமைச்சர் எச். வி. அண்டே, ஐசரிவேலன், புலவர் அறிவுடைநம்பி ஆகியோர் அண்ணா நகர் தொகுதியில் உண்டியல் வசூல் ஈடுபட்டனர்.

அரும்பாக்கம் பேருந்து நிலையத்தில் இருந்து வசூல் துவங்கியது. அமைந்தகரை பூந்தமல்லி நெடுஞ்சாலை, ஆரிங்டன் சாலை, சூளைமேடு வழியாக வன்னியர் தெருவில் ஊர்வலம் முடிவடைந்தது.

அண்ணாவின் கொள்கைகளை அழிக்க அல்லும் பகலும் முயலும் அற்பர்கள் கூட்டம் சாய புரட்சித்தலைவரது கரங்களை வலுப்படுத்தும் வகையில் மக்கள் ஆர்வத்துடன் நிதி வழங்கினார்கள்

## சேப்பாக்கம்

சேப்பாக்கம் தொகுதியில் அமைச்சர் ராஜா முகமது, இரா. ஜனார்த்தனம் எம். எல். சி, உடுமலை லியாகத் அலிகான் ஆகியோர் உண்டியல் வசூலில் ஈடுபட்டனர்.

கிரீன்கேப் அருகே இருந்து துவங்கிய வசூல் ஊர்வலம் சிந்தாதிரிப்பேட்டை, ஜெனரல் பேட்டர்ஸ்ரோடுவாலாஜாசாலை திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை,பெரியதெரு,பெல்ஸ் ரோடு, பார்டர் தோட்டம் பைகிராப்ட்ஸ்ரோடு, வழியாக அண்ணா சாலையில் முடிவடைந்தது.

முஸ்லிம் பெருமக்கள் ஆங்காங்கு கூட்டமாக நின்று நிதி அளித்தனர்,

## புரசைவாக்கம்

புரசைவாக்கம் தொகுதியில் உண்டியல்வசூல் விலலிவாக்கம் பேருந்து நிலையம் அருகிலிருந்து துவங்கியது

அமைச்சர் முத்துசாமி, எஸ். எம். துரைராஜ், சுலோசனசம்பத்ஆகியோர் உண்டியல் வசூலில் ஈடுபட்டனர்.

திறந்த ஜீப்பில் இவர்கள் சென்றபோது மக்கள் திரளாகக்கூடி நின்று எல்லா இடங்களிலும் வரவேற்றனர் நிதியை அள்ளி வழங்கினார்கள

கொன்னூர் நெடுஞ்சாலை, அயன்புரம் நம்மாழ்வார் பேட்டை மடவாக்கம்டேங்க்ரோடு கெல்லீஸ், புரசை மாதவரம் வழியாக பெரம்பூர் புகைவண்டி நிலையம் அருகே முடிவடைந்தது.

## சைதை

சைதைத் தொகுதியில் உண்டியல் வசூல அண்ணா சிலையில் இருநது துவங்கியது.

அமைச்சர் திருநாவுக்கரசு அனகாபுத்தூர் சி. ராமலிங்கம் எம்எல்சி ஏ கே அரங்கநாதன் ஆகியோர் திறந்த ஜீப்பில்செல்ல ஒலி முழக்கம்தீபாவளிபட்டாசு போல முழங்கிக் கொண்டே இருந்தது. மக்கள் நிதியை வழங்கிய வண்ணம் இருந்தனர்.

ஜீன்ஸ்ரோடு, பஜார் ரோடு, குளக்கரை ஆர்.வி. நகர், கங்கையம்மன் கோயில் தெரு வழியாக மாநகராட்சிப் பள்ளி அருகே முடிவடைந்தது

குஜராத் மாநிலம் அகமதாபாத்திலிருந்து அமைச்சர் திருநாவுக்கரசு 11.30 மணிக்கு விமானம் மூலம் சென்னை வந்து, விமான நிலையத்திலிருந்து நேராக உண்டியல் வசூல நிகழ்ச்சியில் பங்கெடுக்க வந்தார்.

## ராதாகிருஷ்ணன் நகர் தொகுதி

டாக்டர்ராதாகிருஷ்ணன் நகர் தொகுதியில் உண்டியல் வசூல் சுறுசுறுப்பாக நடந்தது.

அமைச்சர் எஸ் என் ராஜேந்திரன் திருப்பூர் மணிமாறன், எம் எல் ஏ ஆர்.சவுந்தரராசன் எம்எல்ஏ ஆகியோர் ஜீப்பில் சென்றனர்.

பாரத் திரை அரங்கு அருகே இருந்து புறப்பட்ட கழக மறவர் கூட்டம் திருவொற்றியூர் நெடுஞ்சாலையில் சென்று தங்கம் திரையரங்குஅருகே முடிந்தது.

தாய்க்குலத்தினர் ஆண்களோடு போட்டி போட்டு இங்கே நிதியளித்தனர்.

## பெரம்பூர்

பெரம்பூர் தொகுதியில் அமைச்சர் விஜயசாரதி பி எச் பாண்டியன், வேலூர் நாராயணன் ஆகியோர்உண்டியல்வசூல் செய்தனர்

அய்யாவின் கொள்கைகளை அண்ணாவின் வழியில் அமல்படுத்திவரும்புரட்சித் தலைவரது வேண்டுகோளை நிறைவேற்ற மக்கள் திரண்டு வந்து காத்திருந்து நிதிஅளித்த காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

கன்னிகாபுரத்தில் இருந்து ஊர்வலம் புறப்பட்டது

மாதவரம் நெடுஞ்சாலை மேலப்பட்டி பொன்னப்ப முதலித்தெரு, பக்தவத்சலம் காலனி, சர்மாநகர், எருக்கஞ்சேரி, வியாசர் பாடி, பேசின் பிரிட்ஜ் வழியாக தங்கசாலை மணிக்கூண்டை அடைந்து முடிந்தது.

கழகத் தியாகிகளது குடும்பங்கள் காக்கப்பட புரட்சித் தலைவரது அன்பு வேண்டுகோளுக்கு நகர மக்கள் காட்டிய ஆதரவு மகத்தானதாக இருநதது. எவர் என்ன கூறினாலும் நாங்கள்புரட்சித்தலைவரது பக்கமே என்று நகர மக்கள் தங்கள் எண்ணத்தை இன்று உண்டியல் வசூலின அடையாளமாகக் காட்டி இருக்கிறார்கள்.

(இதரதொகுதிகளில் நடைபெறற உண்டியல் வசூல் படங்கள நாளை வெளிவரும்.)

# திருப்பத்தூர் தேர்தலில் தி. மு. க. உறவு இல்லை? ஆர். வி. சூசக தகவல்

சென்னை, அக். 17- திருப்பத்தூர் இடைத் தேர்தலில் இ. காங்கிரஸ் தனித்துப் போட்டியிட ஆலோசித்து வருகிறது என்று மத்திய நிதி அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் அறிவித்தார்.

மத்திய நிதி அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் சென்னையில் நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் கூறியதாவது:-

திருப்பத்தூர் தேர்தலில் இ. காங்கிரஸ் தனித்துப் போட்டியிடவே இப்போது ஆலோசித்து வருகிறது. இது பற்றி பிரதமர் இந்திரா முடிவெடுப்பார். எந்தக் கட்சியுடனும் இ. காங்கிரஸ் கூட்டு வைத்துக் கொள்ளக் கூடாது என்றும் வண்டுமானால் மற்ற கட்சி ஆதரிப்பது பற்றியோ ஆதரிக்காதது பற்றியோ முடிவெடுத்துக் கொள்ளட்டும் என்ற எண்ணத்தில் இருக்கிறோம்.

இவ்வாறு ஆர். வி. கூறினார்.

## உறவு நிரந்தரம் அல்ல

தி. மு. க.வுடன் உறவு உள்ளதா என்று கேட்ட போதுஎங்களுக்கு நிரந்தர உறவுக் கட்சியும் இல்லை. நிரந்தர பகைமைக் கட்சியும் கிடையாது என்றார் ஆர். வி.

அப்படியானால் தி.மு.க. உறவு முடிந்துவிட்டது என்று அர்த்தம் தானே என்று ஒரு நிருபர் கேட்ட போது ''நீங்களே முடிவெடுத்துக் கொள்ளுங்கள்'' என்று பதில் சொன்னார்.

# தியாக தீபங்களே...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

காகப் படாத பாடுபடுவான்.

அகில இந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தில் இந்தக் கேள்விக்கான பதில் எளிதாகக் கிடைத்து விடுகிறது.

''என் தலைவன் நல்லவன்;
என் தலைவன் தர்மன்;
என் தலைவன் வள்ளல்;
என் தலைவன் இதயம் உள்ளவன்;
என் தலைவன் ஈரம் உள்ளவன் —

அவன் தலைமையில் வழி நடப்பது எனக்கு வாய்த்த பெருமை என்று இங்கேதான் பேசலாம்.

பிணத்திற்குமாலையிட்டு பெருமை பேசுகிறவர்கள் இன்று தி. மு. க. வில் இருக்கலாம்.

இருந்தாலும் வரலாறு புரட்சித்தலைவரின் இந்த உயிருள்ள இயக்கத்தை தான் எப்போதும் வாழ்த்தும்.

பொதுவாகத்தாய்க் கழகத்தில் இருந்து பிரிந்து வந்த புரட்சி இயக்கங்கள் பிழைத்ததில்லை;

இங்கே அகில இந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் வாழ்வதற்கே காரணம், து தாய்க் கழகத்திலிருந்து பிரிந்து வரவில்லை - கழகத்திலிருந்து தாயே பிரிந்து வநது விட்டாள். ஆகவே தான் இது வெற்றி பெற்றது.

இங்கே இருக்கிற தொண்டர்கள் அரிஸ்டாட்டில்களா என்பதல்ல தலைவரின் கவலை இவர்கள் அரிச்சநதிரர்களாக இருக்க வேண்டும்.

இவர்கள் வெறும் மூளை படைத்த இயந்திரங்களாக இருக்கவேண்டாம்; இதயம் படைத்தவர்களாக இருந்தால் போதும்.

இது தான் வரலாற்றின கணிப்பு!

பத்தாவது ஆண்டு பிறக்கும்; இந்தப் பாங்கான நாளில் இந்த ஈனமான வேள்வியில் தங்களை இழந்தவர்களை நினைத்துக் கொள்கிறோம். அவர்கள் சென்ற திக்கு நோக்கித் தொழுகிறோம்.

தர்மத்தாயின் தலைமகன் வழிநடத்தும் இந்த இதயமுள்ள இயக்கம் வரலாற்று வழித்தடத்தில் மாபெரும் எல்லைக்கல் என்பதை உலகம் இப்போது உணருகிறது! தியாக தீபங்கள் எரிகின்ற திக்கு நோக்கி இன்று வழிபடுகிறோம்.

# முத்துராமன் உடல் தகனம்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பாவலர் முத்துசாமி எஸ் எஸ் ஆர், ஜேப்பியார் முசிறிப்புத்தன், டி. வி. நாராயணசாமி ஆகியோரும் மலர் மாலை வைத்து அஞ்சலி செலுத்தினார்கள்.

எம் ஜி ஆர் பிக்சர்ஸ் குஞ்சப்பன், சத்தியா ஸ்டுடியோ அரி, சந்திரன் ஆகியோரும் மலர்வளையம் வைத்து கண்ணீர் அஞ்சலி செலுத்தினர்.

வி.கே.ராமசாமி, நம்பியார், ஸ்ரீகாந்த், டைரக்டர் ஸ்ரீதர், ரஜினி காந்த், விஜயகாந்த், படாபட் ஜெயலட்சுமி ஜூனியர் கருப்பையா, ரவிச்சந்திரன், ராஜ்குமார், கிருஷ்ணமராஜு சேதுமாதவன், ஜெய்சங்கர். ராஜேந்திரகுமார், முருகன் தியேட்டர் உரிமையாளர் வி. எம். பரமசிவ முதலியார் கே. ஆர். விஜயா பழனியப்பன் ராமசாமி, ஏ. வி. எம். ராஜன், புஷ்பலதா, டைரக்டர் துரை, டி. ஆர். ராமச்சந்திரன், பிரேம் நசீர், கமலஹாசன் மலேசிய வாசுதேவன் சி. வி. ராஜேந்திரன் சீர்காழி கோவிந்தராஜன், டி. எம். சவுந்தரராஜன், ஏ. வி. எம். சரவணன், குமரன், பாலசுப்ரமணியன், பி. மாதவன், வாணி ஜெயராம், பிரமிளா, முக்தா சீனிவாசன், சிவசூரியன், குலதெய்வம் ராஜகோபால், பி. எஸ். வீரப்பா, பாரதி வாசு, வாசுதேவன், அம்பிகா, ஸ்ரீதேவி, ஸ்ரீபிரியா, பஞ்சு, ப. நீலகண்டன் ராமாநாயுடு, சங்கர்—கணேஷ், சிவச்சந்திரன், ஜெமினிகணேசன், ஜெய்கணேஷ், கவிதா, எம்.எஸ் விஸ்வநாதன் கண்ணன், சகஸ்ரநாமம், பாரதிராஜா மற்றும் பலர் வந்து அஞ்சலி செலுத்தினர்.

சிவாஜிகணேசன் தன் துணைவியாரோடு வந்து அஞ்சலி செலுத்தினர். சிவாஜியின் தமையனார் வி. சி. தங்கவேலுவும் அஞ்சலி செலுத்தினர்.

ஏராளமான ரசிகப்பெருமக்கள் அஞ்சலி செலுத்துவதற்காக அதிகாலையிலிருந்தேகூடிவிட்டார்கள். சோழா ஓட்டலிலிருந்து முத்துராமன் வீட்டுக்குப் போகும் வழிவரை மக்கள் துயரமே உருவாகப் பெருங் கூட்டமாகக் கூடி இருந்தார்கள்.

11.25 மணிக்கு இறுதி ஊர்வலம் புறப்பட்டது.

போலீஸ் ஐ.ஜி. ஆபீஸ் பின்புறமுள்ளசுடுகாட்டில் உடல் தகனம் நடந்தது. சிதைக்கு முத்துராமனின் மூத்தமகன் கணேஷ் தீ மூட்டினார் அப்போது கணேசும் அவரது சகோதரர் கார்த்திக்கும் கதறி அழுதனர் கூடி இருந்தமக்களும்கண்ணீர் பெருகெடுத்து ஓட, அந்த நற்பண்பாளருக்கு அஞ்சலிசெலுத்தினார்கள்

# ஷெரீப் ரெக்ஸ் அனுதாபம்

நடிகர் முத்துராமன் மறைவுக்கு சென்னை நகர ஷெரீப் டாக்டர் ரெக்ஸ் இரங்கல் தெரிவித்துள்ளார்.

ரெக்ஸ் வெளியிட்டுள்ள அனுதாபச் செய்தியில் கூறியிருப்பதாவது:-

தமிழ்த்திரை வானில் பேரொளி வீசிய தாரகையாக திகழ்ந்தவர் முத்துராமன்.

முத்துராமன் மறைவு தமிழ்கூறும் நல்லுலகத்தையே துயரத்தில் ஆழ்த்தி உள்ளது.

இனிய பண்புகளுக்கும் ஒழுக்கமிக்க வாழ்க்கைக்கும் கடமை உணர்வுக்கும் சீரிய ஒரு சான்றாக விளங்கினார். அவரது மறைவு தமிழர் சமுதாயத்திற்கு ஒரு பேரிழப்பாகும்.

அவரது குடும்பத்துக்கு சென்னை நகர மக்கள் சார்பில் என் அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாறு ரெக்ஸ் கூறியுள்ளார்.

# பெரியார் மாவட்ட கழக தோழர்களுக்கு

வருகிற 19-10-81 அன்று ஈரோடு பயணிகள் விடுதியில் மாவட்டக் கழக மன்ற நிர்வாகிகள் ஆலோசனைக் கூட்டம் மாண்புமிகு அமைச்சர் முத்துசாமி தலைமையில் நடைபெறும்.

ஒன்றிய செயலாளர்கள், மாவட்ட பிரதிநிதிகள் பொதுக்குழு உறுப்பினர்கள், புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்ற மாவட்ட நிர்வாகிகள் அனைவரும் தவறாது வந்து கலந்து கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

ஜி. கே. சுப்பிரமணியம் (மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற செயலாளர்)

கே. செங்கோட்டையன் (மாவட்ட கழக செயலாளர்),

# திருவை அண்ணாமலை கட்டுரை நாளை வரும்

## கழகத்தின் 10-வது ஆண்டு விழாவையொட்டி விவசாயிகள், மாணவர்கள் - தொழிலாளர்கள் மீதான

# வழக்குகள் வாபஸ்

## நல்லதோர் சூழ்நிலை உருவாக புரட்சித்தலைவர் அரசு தாராளம்

சென்னை, அக். 17. பேரறிஞர் பெருந்தகை அண்ணாவின் கொள்கைகளை அமல்படுத்த புரட்சித்தலைவர் கண்ட கழகம் தொடங்கி 10 ஆண்டுகள் ஆவதை யொட்டி விவசாயிகள் மாணவர்கள், தொழிலாளர்கள் மீதான வழக்குகள் வாபஸ் பெறப்படும் என்று தமிழக அரசு அறிவித்துள்ளது.

தமிழ்நாட்டில் ஒரு நல்ல சூழ்நிலை உருவாக்கும் நோக்கத்துடன் இந்த வழக்குகளை வாபஸ் பெற அரசு முடிவு செய்துள்ளது.

இது குறித்த அறிவிப்பை தமிழக அரசு நேற்று வெளியிட்டுள்ளது. அரசு அறிவிப்பு விவரம் வருமாறு:

தமிழ் நாட்டில் ஆளும் கட்சியான அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் தொடங்கி 10-வது ஆண்டு ஆரம்பமாகிறது.

அதனையொட்டி விவசாயிகள், தொழிலாளர்கள், மாணவர்கள், ஆசிரியர்கள், அரசியல் தொண்டர்கள் மற்றும் சட்டம் ஒழுங்கை மீறியவர்கள் மீது தொடரப்பட்ட வழக்குகளை வாபஸ் பெறுவதுபற்றி தமிழ்நாடு அரசு பரிசீலித்தது.

### நல்லதோர் சூழ்நிலை உருவாக...

தமிழ்நாட்டில் ஒரு நல்ல சூழ்நிலையை உருவாக்கும் நோக்கத்துடன் அரசு கவனமாகப் பரிசீலனை செய்தது.

குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யப்பட்டு நீதிமன்ற விசாரணையில் இருந்து வரும் சில வழக்குகளை வாபஸ் பெற முடிவு செய்து இருக்கிறது.

### வன்முறை அல்லாத வழக்குகள்

வாபஸ் பெறப்படும் வழக்குகள் பற்றிய விபரம்:

விவசாயிகள் மீது தொடரப்பட்ட மிக மோசமான கடுமையான குற்றங்களுக்காக தொடரப்பட்டுள்ள வழக்குகள் வாபஸ் பெறப்படமாட்டாது.

தொழிலாளர்கள், அரசாங்க ஊழியர்கள், மாணவர்கள், ஆசிரியர்கள் ஆகியோர் மீது உள்ள கொலைக் குற்றம் நீங்கலாக உள்ள மற்ற வழக்குகள் வாபஸ் பெறப்படும்.

பல்வேறு அரசியல் கட்சிகளைச் சேர்ந்தவர்கள் மீதான வழக்குகளில் வன்முறை சம்பந்தப்பட்டவை தவிர மற்ற வழக்குகள் வாபஸ் பெறப்படும்.

### வாபஸ் ஆகாதவை

வாபஸ் பெறப்படாத வழக்குகள் விவரம் வருமாறு:-

கொலை மற்றும் கொலை முயற்சி சம்பந்தமாக தொடரப்பட்ட வழக்குகள், பஸ் மற்றும் மோட்டார் வாகனங்களைத் தாக்கியது சம்பந்தமாக, மற்றும் ஆட்களைத் தாக்கியது சம்பந்தமான வழக்குகள் வாபஸ் ஆகாது.

உயிர்ச்சேதம் மற்றும் பொருட்சேதம் ஏற்படுவதற்கான வன்முறைசெயல்களில் ஈடுபட்டவர்கள் மீதான வழக்குகள் வாபஸ் ஆகாது.

வெளி நாட்டுத் தூதர் அலுவலகங்கள் முன்பு மறியல் மற்றும் மறியல்செய்ய முயன்றவர்கள் மீது சம்பந்தப்பட்ட வழக்குகள்.

### சிறை தண்டனை ரத்து விவரம்

சில சிறைக் கைதிகளின் தண்டனையை ரத்து செய்தும் தமிழக அரசு உத்திரவிட்டுள்ளது. அது பற்றிய விவரம்:—

சாராயம், மற்றும் போதைப் பொருள் இறக்குமதி செய்தல், ஏற்றுமதி செய்தல், வைத்திருத்தல் போன்ற குற்றங்களுக்காக தமிழ்நாடு மதுவிலக்கு சட்டத்தின்படி தண்டனை அடைந்து சிறையில் இருப்பவர்களின் மீது உள்ள தண்டனை காலம் ரத்து செய்யப்பட்டுள்ளது.

ஆனால் கள்ளச் சாராய ஏற்றுமதி, இறக்குமதி, மற்றும் வைத்திருத்தல் ஆகிய குற்றங்களுக்காக தண்டனை அடைந்தவர்களுக்கு இது பொருந்தாது.

மரங்களில் இருந்து கள் இறக்குதல், அல்லது அனுமதி அளித்தல் போன்ற குற்றங்களுக்காக தண்டனை அடைந்தவர்களின் மீதிக் காலம் ரத்து ஆகும்.

சாராயம் மற்றும் போதைப் பொருள்களை சாப்பிட்டவர்கள், மற்றும் வாங்கியவர்கள் அடைந்து வரும் தண்டனை ரத்து ஆகும்.

### தண்டனைக் காலம்

தமிழ்நாடு மதுவிலக்கு சட்டப்படி கைதாகி தண்டனை அடைந்தவர்கள் தண்டனைக் காலம் ரத்தாகும்.

இந்த சட்டப்படி கைதாகி அவர்கள் மீது நீதி மன்றத்தில் விசாரணையில் இருந்து வரும் வழக்குகள் வாபஸ்பெறப்படும்.

இந்த உத்தரவு கள்ளச் சாராயம் காய்ச்சுதல், சட்ட விரோதமாக கள் இறக்குதல், கள்ளச்சாராய, தொழிற்சாலை நடத்துதல், கள்ளச்சாராய விற்பனை சாராய தயாரிப்புக்கான மூலப்பொருள்களைப் பதுக்கி வைத்தல் ஆகிய குற்றங்களுக்காக தண்டனை அடைந்தவர்களுக்குப் பொருந்தாது.

இவ்வாறு அரசு அறிவிப்பில் கூறப்பட்டுள்ளது.

---

### முதல்வருக்கு ஊராட்சி ஊழியர் நன்றி

மதுரை, அக். 17— தமிழ்நாட்டில் உள்ள 12 ஆயிரத்து 700 ஊராட்சிகளில் பணிபுரியும் ஊரமுதர் எழுத்தர்களுக்கு 1-9-81 முதல் மாதம் 15 ரூபாய் ஊதிய உயர்வு அளித்துள்ள முதல்வர் புரட்சித்தலைவருக்கும், உள்ளாட்சித் துறை அமைச்சர் குழந்தை வேலுவுக்கும் தமிழ்நாடு ஊராட்சி எழுத்தர் சங்கம் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொண்டுள்ளார்கள்.

ஊராட்சி எழுத்தர்களின் கோரிக்கையை தமிழக அரசுக்கு எடுத்துக் கூறி ஊதிய உயர்வு பெறுவதற்கு ஒத்துழைப்புத் தந்து, ஊராட்சி எழுத்தர்கள் பணிப் பாதுகாப்பு பெறுவதற்கு முயற்சி எடுத்துக் கொண்டிருக்கும் தமிழ்நாடு ஊராட்சி எழுத்தர் சங்கத்தின் கவுரவத் தலைவரும் முன்னாள் சட்டமன்ற உறுப்பினருமான வெ. பாலகுருவுக்கும் சங்கத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துள்ளனர்.

---

## தமிழக தீப்பெட்டி தொழிலில் ஏற்பட்டு உள்ள பிரச்சினைகள்

### மத்திய அமைச்சர் ஆர்.வி.யுடன் அமைச்சர் கே. ஏ. கே. ஆலோசனை

புதுடெல்லி, அக் 17— தமிழக தீப்பெட்டித் தொழிலிலுள்ள பிரச்சினைகள் குறித்து மத்திய நிதியமைச்சர் ஆர். வெங்கட்ராமனுடன் தமிழக ஊரகத்தொழில்துறை அமைச்சர் கே.ஏ.கே. ஆலோசனை நடத்தினார்.

தமிழக ஊரக தொழில் துறை அமைச்சர் கே. ஏ. கே, டெல்லியில், மத்திய நிதியமைச்சர் ஆர். வெங்கட்ராமனைச் சந்தித்துப் பேசினார்.

தமிழகத்தில் தீப்பெட்டித் தொழிலை எதிர்நோக்கியுள்ள பிரச்சினைகள் குறித்து அமைச்சர் கே. ஏ. கே. மத்திய அமைச்சர் ஆர். வெங்கட்ராமனிடம் எடுத்துக் கூறினார்.

தமிழகத்தின் ஆலோசனைகள் குறித்து பரிசீலித்து மத்திய அரசு விரைவில் தக்க முடிவுகளை எடுக்கும் என அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் கூறியதாக நிருபர்களிடம் அமைச்சர் கே. ஏ. கே. கூறினார்.

### தமிழக அரசின் கோரிக்கை பரிசீலனை

சிறுதொழில் துறையில் தயாரிக்கப்படும் தீப்பெட்டிகளுக்கு (கார்டு போர்டில் தயாரிக்கப்படுவது) ரூ. 1.60-லிருந்து 5.50 ஆக எக்சைஸ் தீர்வை உயர்த்தப்பட்டுள்ளது குறைக்கப்பட வேண்டும் என்ற தமிழகத்தின் கோரிக்கையை அனுதாபத்துடன் பரிசீலிப்பதாக மத்திய அமைச்சர் ஆர் வெங்கட்ராமன் கூறியதாகவும், அமைச்சர் கே.ஏ.கே. கூறினார்.

இதுதவிர மற்றும் பல்வேறு பிரச்சினைகள் குறித்து மத்திய அமைச்சர் வெங்கட்ராமனுடன் பேச்சு வார்த்தை நடத்தியதாகவும் அமைச்சர் கே. ஏ. கே. கூறினார்.

### கழகத்தோழர் மீது தி. மு. க. காலிகள் தாக்குதல்

சென்னை, அக். 17— சென்னை பூங்காநகர் பகுதி கழகத்தோழர் எம். பாபு தன் வீட்டிலிருந்து வெளியே போகும்போது போலு நாயக்கன் தெருவில் சில தி. மு. க. காலிகள் பாபுவை சூழ்ந்துகொண்டு சோடா பாட்டிலாலும் இரும்புக் குழாயாலும் பயங்கரமாகத் தாக்கினராம்.

இந்தத் தாக்குதலில் படுகாயமடைந்த பாபு கீழ்ப்பாக்கம் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார்.

மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுவரும் பாபுவை மதுசூதனன், ரா. துரையரசன், நா. செல்வரசன், தன்ராஜ், சின்னத்தம்பி ஆகியோர் சென்று பார்த்து விசாரித்தனர்.

---

### நிதிஅமைச்சர் டாக்டர் நாவலர் நிகழ்ச்சிகள்

17-10-81 காலை 6.05 மணி கோவை, 10.30 மணி குன்னூர்- தமிழ்நாடு தோட்ட உரிமையாளர்கள் ஆண்டுக்கூட்டத்தில் கலந்து கொள்ளல். மாலை 4.30 குன்னூர்-பொதுமக்கள் வரவேற்பு.

18-10-81 காலை 10.00 மணி உதகமண்டலம்- மீன் கண்காட்சி சாலை திறப்பு விழா 11-00 உதகை- பொதுமக்கள் வரவேற்பு 4.30 பவானி சாகர்- மீன்குஞ்சு உற்பத்தி நிலையம் திறப்புவிழா. இரவு 7.00 கோவை பொது மக்கள் வரவேற்பு.

19.10.81 காலை 8.00 மணி சேலம் காலை 10.00 மணி பைவூர் (காவேரிப்பட்டினம்) திருமணம் மாலை 5.00 மணி கிருஷ்ணகிரி — வ. வே. சு. ஐயர் நூற்றாண்டு விழா வ. உ. சிதம்பரம் நினைவு விழா. பட்டாக்கள் மற்றும் கருவிகள் வழங்கும் விழா. மாலை 7.00 மணி கிருஷ்ணகிரி— பொது மக்கள் வரவேற்பு.

---

## ரேஷன் கடை 'கியூ' நிலைமையைத் தவிர்க்க முதல்வர் நடவடிக்கை

### அதிகாரிகளுடன் ஆலோசனை

சென்னை, அக். 17—ரேஷன் கடைகளில் நீண்ட 'கியூ'வில் நின்று மக்கள் அவதிப்படுவதைத் தவிர்க்க நடவடிக்கை எடுப்பது பற்றி அதிகாரிகளுடன் முதல்வர் புரட்சித்தலைவர் ஆலோசனை நடத்தினர்.

தமிழக உணவு நிலைமை குறித்தும் விலைவாசிகள் ஏறுமல் தடுப்பதற்கான நடவடிக்கைகள் எடுப்பது பற்றியும் தலைமைச் செயலகத்தில் உணவுத்துறை அதிகாரிகளோடு முதல்வர் புரட்சித்தலைவர் நண்டநேரம் ஆலோசனை நடத்தினர்.

ரேஷன் கடைகளில் நீண்ட "கியூ" வரிசையில் மக்கள் காத்திருக்கும் நிலைமை கூடாது. உடனுக்குடன் அவர்களுக்கு அத்தியாவசியப் பொருட்கள் வழங்க வழிவகை காணவேண்டும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டார்.

நுகர்பொருள் வாணிபக் கழகக்கடைகளை அதிகரிக்கலாமா என்பது குறித்து அதிகாரிகளுடன் முதல்வர் புரட்சித்தலைவர் ஆலோசனை நடத்தினர்.

---

### அமைச்சர் ராஜாமுகமது நிகழ்ச்சிகள்

22-10-81 மாலை 6.00 மணி கொடைக்கானல்

23-10-81 காலை 11.00 மணி நிலபட்டா வழங்கும் நிகழ்ச்சி — கொடைக்கானல்.

24-10-81 மாலை 5.00 மணி திண்டுக்கல் மாலை 6.00 மணி பாரதி விழா நிகழ்ச்சி திண்டுக்கல்.

---

போக்குவரத்து விதிகள் பற்றி

### டாக்சி - ஆட்டோ ரிக்ஷா டிரைவர்கட்கு பயிற்சி

சென்னை, அக். 17— சாலைப்போக்குவரத்து விதிமுறைகள் குறித்து டாக்சி, மற்றும் ஆட்டோ ரிக்ஷா டிரைவர்களுக்குப் பயிற்சி அளிக்க சென்னை நகர போலீசார் பயிற்சி வகுப்புகளை நடத்த உள்ளார்கள்.

இத்தகவலை தமிழக ஐ. ஜி. ராதாகிருஷ்ணன் தெரிவித்துள்ளார்.

### மோஷே தயான் மரணம்

டெல்அவிவ், அக். 17— இஸ்ரேல்முன்னாள் ராணுவ அமைச்சர் மோஷேதயான் நேற்று மரணம் அடைந்தார். அவருக்கு வயது 66.

---

## மாவட்டந்தோறும் சாரணர் நிலையங்கள்: முதல்வர் அறிவிப்பு

சேலம், அக் 17— தமிழகத்தில் உள்ள அனைத்து மாவட்டங்களிலும் சாரணர் நிலையங்கள் அமைக்கப்படும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்திருக்கிறார்.

சேலத்தில் 4 நாட்கள் நடைபெற்ற தமிழ்நாடு 5-வது மாநில சாரணர் முகாம் கடந்த வியாழன் அன்று நிறைவுபெற்றது. தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் சுமார் 4 ஆயிரத்து 500க்கும் மேற்பட்ட சாரணர்கள் மற்றும் சாரணிகள் இந்த முகாமில் கலந்து கொண்டனர்.

முகாமின் நிறைவு விழாவில முதல்வர் புரட்சித்தலைவர் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார்.

அப்போது அவர் கூறியதாவது:—

சாரணர் இயக்கத்துக்கு தமிழக அரசு தற்போது ஆண்டுதோறும் 30 ஆயிரம் ரூபாய் மானயம் அளித்து வருகிறது. இந்தப் பணம் அடுத்த ஆண்டில் இருந்து 3 லட்சம்ரூபாயாக உயர்த்தப்படும். தவிர தமிழகத்தில் உள்ள மாவட்டங்கள் முழுவதும் சாரணர் நிலையங்கள் அமைக்கப்படும். சாரண இயக்கத்தில்பங்குகொண்டு சிறப்பான முறையில் தகுதி பெற்ற மாணவ மாணவிகளுக்கு கல்விச்சலுகை, மற்றும் வேலை வாய்ப்பு முன்னுரிமை வழங்கப்படும்.

### ஒன்றுபட்டு வாழ...

மாணவர்கள் ஜாதி வித்தியாசத்தை அறவே புறக்கணித்து ஒன்றுபட்ட சகோதர சகோதரிகளாக நடந்து கொள்ள வேண்டும்.

அப்போதுதான் அவர்கள் பெரியவர்களாகும் போதுவேறு ஜாதிமதமற்ற சமுதாயத்தின உறுப்பினர்களாக வளர்ந்து நாட்டுக்கு நல்லமுறையில் சேவை செய்வார்கள். சாரண இயக்கம் நாட்டில் நிலவும் சமுதாய கேடுபாடுகளைக்களைவதில் நன்கு செயல்படுகிறது.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

முன்னதாக சாரண சாரணியர்களின் அணிவகுப்பு மரியாதையை முதல்வர் ஏற்றுக் கொண்டார்.

---

கயா அருங்காட்சியகத்தில்

### ரூ. 5 கோடி மதிப்புள்ள கலை பொருட்கள் திருட்டு

கயா, அக். 17— கயாவில் உள்ள அருங்காட்சியகத்தில் 5 கோடி ரூபாய் மதிப்புள்ள பழங்கால கலைப்பொருட்கள் ஐந்தை 6 பேர் திருடிச் சென்று விட்டதாக தெரிவிக்கப்பட்டுள்ளது.

பார்வையாளர்கள்போல் வந்து இவர்கள் இந்தப் பொருட்களைத் திருடிச் சென்றுவிட்டனராம்.

இது குறித்துபோலீசார் விசாரித்து வருகிறார்கள்.

---

பாரதி நூற்றாண்டு விழாவுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் சார்பில்

## பிரதமர் இந்திராவிடம் மோகனரங்கம் அழைப்பு கொடுத்தார்

புதுடெல்லி, அக், 17— பிரதமர் இந்திரா காந்தியை தமிழக அரசின் டெல்லி சிறப்பு பிரதிநிதி மோகனரங்கம் நேற்று புதுடெல்லியில் சந்தித்தார்.

பாரதி நூற்றாண்டு விழாவுக்கான அழைப்பை அப்போது பிரதமரிடம் அவர் கொடுத்தார்.

தேசிய மகாகவி— பாட்டுக்கு ஒரு புலவன் பாரதியின் நூற்றாண்டு விழாவினை புரட்சித்தலைவர் அரசு சிறப்பாகக் கொண்டாட ஏற்பாடு செய்துள்ளது.

### ஆண்டு முழுவதும் கொண்டாட்டம்

டிசம்பரில்இருந்து ஆண்டு முழுவதும் கொண்டாட திட்டம் திட்டப்பட்டுள்ளது. தமிழகத்திலும், மற்றும் பிற மாநிலங்களிலும் பாரதிவிழாகொண்டாடப்படும்.

பாரதி நூற்றாண்டுவிழா டிசம்பர் 11ந் தேதி தொடங்குகிறது.

பாரதி நூற்றாண்டு விழாவினை தொடங்கிவைக்குமாறு பிரதமர் இந்திரா காந்தியை ஏற்கனவே முதல்வர் புரட்சித்தலைவர் கேட்டுக் கொண்டுள்ளார்.

### முதல்வர் சார்பில்...

நேற்று பிரதமர்இந்திரா காந்தியை தமிழக அரசின் டெல்லி சிறப்பு பிரதிநிதி மோகனரங்கம் நேற்று சந்தித்தார்.

பாரதி நூற்றாண்டு விழாவுக்கான அழைப்பை முதல்வர் புரட்சித்தலைவர் சார்பில் பிரதமர் இந்திராவிடம் அப்போது மோகனரங்கம் தொடுத்தார்.

### திருநின்றவூர் மக்கள் மறுமலர்ச்சி மன்றம்

திருநின்றவூர், அக்.17— திருநின்றவூரில் மக்கள் மறுமலர்ச்சிமன்றம் என்ற கட்சி சார்பற்ற அமைப்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது.

இந்தத்துவக்க விழாவில் பி. செல்வராஜ் டி. எஸ். கே. சாரியார், தன்னரசு கணபதி, கோவிந்தன், கருணாகரன், அன்பழகன், எத்திராஜ், சுகுமார், மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

இந்த அமைப்பின் சார்பில் தந்தை பெரியார்நகர் பெயர்சூட்டுவிழா, காந்தி பிறந்தநாள் விழாகொண்டாடப்பட்டது.

---

பாகவதர் நிதிஉதவி:

### முதல்வருக்கு பொற்கொல்லர்கள் பாராட்டு

திருச்சி, அக். 17— தமிழ்நாடு சர்டிபிகேட் பொற்கொல்லர்கள் சங்கம் முதல்வர் புரட்சித் தலைவருக்கு பாராட்டும் நன்றியும் தெரிவித்துள்ளது.

இதுகுறித்து சங்க செயலாளர் சேவியர் துரைராஜ் கூறியிருப்பதாவது:—

நூற்றுக்கணக்கான நாடகங்களிலும் படங்களிலும் நடித்து மேடைகளில் இன்னிசைக்கச்சேரிகள் நடத்தி மக்களின் அபிமானத்தைப் பெற்ற-மறைந்த - ஏழிசை மன்னர் எம். கே. தியாகராஜபாகவதர் குடும்பத்தினர் வறுமையிலுள்ள நிலையறிந்து ஒரு லட்சம் ரூபாயை கழகத்தின் சார்பாக வழங்கிய முதல்வர் எம். ஜி. ஆரை தமிழ்நாடு சர்டிபிகேட் பொற்கொல்லர் சங்கம் பாராட்டுகிறது.

திருச்சி கலையரங்கத்திற்கு எங்களது வேண்டுகோளை ஏற்று - மக்களின் வேண்டுகோளை ஏற்று- 'தியாகராஜ பாகவதர் மன்றம்' எனப் பெயர் சூட்டியதற்கும் நன்றியும பாராட்டும் தெரிவித்துக்கொள்கிறோம்.

இவ்வாறு சேவியர் துரைராஜ் கூறியுள்ளார்.

# தாராபுரம்

## தொழிற்பேட்டை துவக்க விழா

**பெரியார் மாவட்டம் 18-10-1981 மாலை 6-15 மணி**



அண்ணாவின் அடிச்சுவட்டில்
அரிய தொண்டாற்றும்
மாண்புமிகு
தமிழ்நாடு முதலமைச்சர்,
புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர்.





பெரியார் மாவட்டம், தாராபுரத்தில் அமராவ நதிக்கரையில் 'சிட்கோ' தொழிற்பேட்டை துவக்கப் படுவது தமிழ் நாட்டில் தொழில் முன்னேற்றத்துக்கு எடுத்துக்காட்டாகும். ஊரகக் தொழில் வளர்ச்சியில் பெரிதும் நாட்டமுள்ள புரட்சித்தலைவரின் அருள் ஆட்சி தாராபுரத்தில் 'சிட்கோ'தொழிற்பேட்டையை துவக்குவதால், பெரியார் மாவட்ட மக்களுக்கு வேலை வாய்ப்புகள் பெருக வழி ஏற்படும். நெடுநாட்களாகத் தீர்க்கப்படாமல் இருந்த தேவையை புதிய தொழிற் பேட்டை தீர்க்கும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. குறிப்பாக, இப்பகுதியில் பட்டுப்பூச்சி வளர்ப்புத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு இந்தத் தொழிற் பேட்டை சிறப்பாக சேவை புரியும் என்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

கே. ஏ. கிருஷ்ணசாமி
ஊரகத் தொழில் துறை அமைச்சர்



தமிழக முதல்வர் புரட்சித்தலைவரின் வரலாற்று சிறப்புமிகு பொற்கால ஆட்சியில் பட்டு நூல் தயாரிப்பிற்காக, 18 தொழிற்கூடங்களும், மற்றும் சிறிய தொழில்களுக்காக 14 தொழிற்கூடங்களும் அடங்கிய தொழிற்பேட்டை ஒன்று பெரியார் மாவட்டம், தாராபுரத்தில் துவக்கப்படுவது அறிந்து மகிழ்ச்சி அடைகின்றேன்.

இத்தொழிற்பேட்டை, வேலை வாய்ப்புகள் அதிகம் நல்கி, உற்பத்திகளைப் பெருக்கி, மக்களின் பொருளாதார நிலையினை உயர்த்தி, சீரும் சிறப்புடனும் என்றும் விளங்கிட வாழ்த்துகின்றேன்.

இத்தொழிற்பேட்டையை உருவாக்கிய தமிழ் நாடு சிறுதொழில் வளர்ச்சி நிறுவனத்தின் இச் செயலினைப் பாராட்டுகின்றேன்.

அண்ணா நாமம் வாழ்க!
புரட்சித்தலைவர் புகழ் ஓங்குக!!

சு. முத்துசாமி,
போக்குவரத்துத்துறை அமைச்சர்.

### நிகழ்ச்சி நிரல்:

வரவேற்புரை:
**திரு ராம்சந்தர்** இ. ஆ. ப.
தலைவர் சிட்கோ,
தலைமை உரை:
மாண்புமிகு **திரு. எஸ். முத்துசாமி** அவர்கள்
தமிழ்நாடு அரசு போக்குவரத்துத்துறை அமைச்சர்
மாண்புமிகு **திரு. கே.ஏ.கிருஷ்ணசாமி** எம். ஏ. பி. எல்.,
தமிழ்நாடு அரசு ஊரகத் தொழில்துறை அமைச்சர்
வாழ்த்துரை:
**திரு. சி. ஆர். ராஜேந்திரன்** இ.ஆ.ப.,
(பட்டுத்துறை இயக்குநர்)
**திரு.ஏ.என்.தயானேஸ்வரன்** இ.ஆ.ப.
(மாவட்ட ஆட்சித் தலைவர், பெரியார் மாவட்டம்)
**திரு. ஏ. சேனாபதி கவுண்டர்**
(நாடாளுமன்ற உறுப்பினர், பழனி தொகுதி)
**திரு. ஏ. பெரியசாமி**
(சட்ட மன்ற உறுப்பினர், தாராபுரம் தொகுதி)
**திரு. எம். சீனிவாசன்**
(பொது மேலாளர், மாவட்ட தொழில் மையம், ஈரோடு)
**திரு. ஏ. தண்டபாணி**
(தலைவர், தாராபுரம் சிறுதொழில் சங்கம்)
நன்றியுரை:
**திரு. டி. கங்கப்பா** இ. ஆ. ப.,
(நிர்வாக இயக்குநர், சிட்கோ)

## பட்டு வளர்ச்சித் தொழிலின் மேம்பாட்டில் விற்பனை வசதிகளின் முக்கியத்துவம்

திரு.
**சி. ஆர். ராஜேந்திரன்** இ. ஆ. ப.
பட்டுத்துறை இயக்குநர்

தமிழ் நாட்டில் பட்டு வளர்ப்புத் தொழில் கடந்த சில ஆண்டுகளில்குறிப்பிடத் தக்க வளர்ச்சி அடைந்துள்ளது.

பட்டுக்கூடுகளுக்குதற்போது இருக்கும் நல்ல விலையினால் தமிழ்நாட்டில் பட்டுத் தொழில் மிகவும் லாபகரமானஒருதொழிலாக அமைந்துள்ளது. பட்டுத் தொழில் குறைந்த மூலதனத்தைக் கொண்டு அதிக வேலை வாய்ப்பு அளிக்கும் விவசாயத்தை அடிப்படையாகக் கொண்ட ஒருஊரகத் தொழிலாக அமைந்துள்ளது.

மத்திய மற்றும் மாநில அரசுகளின்பல சீரிய திட்டங்களினால் தமிழ் நாட்டில் முசுக்கொட்டைச் செடி பயிரிடும் பகுதி கணிசமாக உயர்ந்துள்ளது. இதன் காரணமாக பட்டுக்கூடு உற்பத்தியும் பல மடங்கு பெருகி இவ்வாண்டில் சுமார் 20 லட்சம் கிலோகிராம் பட்டுக் கூடு உற்பத்தி செய்யப்படலாம் என மதிப்பிடப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் கைத்தறிப் பட்டு நெசவு சிறந்த முறையில் வளர்ந்துள்ளது. காஞ்சிபுரம். ஆரணி, சேலம், கும்பகோணம் போன்ற பகுதிகளில் உள்ள சுமார் 40 ஆயிரத்திற்கும் மேற்பட்ட பட்டுக் கைத்தறிகள் ஆண்டொன்றுக்கு தறி ஒன்றுக்கு 25 கிலோ கிராம் பட்டு வீதம் சுமார் 10 இலட்சம் கிலோ கிராம் பட்டு நூல் உபயோகிக்கின்றன என்று கணக்கிடப்பட்டுள்ளது. இதனை மனதில் கொண்டு பட்டு வளர்ச்சித் துறை தமிழ்நாட்டின் சுய தேவையை பூர்த்தி செய்யும் வகையில் மாநிலத்தில் உற்பத்தியாகும் பட்டுக் கூடுகளை இங்கேயே பட்டு நூலாக மாற்றும் பொருட்டு பல திட்டங்களை வகுத்து அவைகளை செயல்படுத்தியும் வருகிறது.

புதியதாக வளர்ந்துவரும் பட்டுத் தொழிலினை ஒரு நல்ல நிலைக்கு எடுத்துச் செல்ல 1978-79ம் ஆண்டில் காஞ்சிபுரத்தில் தலைமையகமாகக் கொண்ட ஒரு மாநில தொழிற் கூட்டுறவு பட்டு விற்பனை இணையம நிறுவப்பட்டது. இவ்விணையம நிறுவப்படும் முன் தமிழ் நாட்டில் உற்பத்தியாகிவந்த சிறிய அளவு பட்டு நூல்கூட விற்பனை செய்வது மிகவும் சிரமமாக இருந்தது.

இவ்விணையம் பட்டுக் கூடுகள் உற்பத்தி செய்யும் விவசாயிகள் பட்டு நூல் எடுக்கும் நூற்பாளர்கள கோராப் பட்டை பாவாகவும், ஊடையாகவும் மாற்றும் முறுக்காளர்கள மற்றும் பட்டு நெசவாளர்களை உறுப்பினராகக் கொண்டு பட்டுத் தொழிலின் எல்லாத் துறைகளில் உள்ளவர்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ளது.

இணையம் 9.9.78 அன்றிலிருந்து காஞ்சிபுரத்தில் செயல்படத் துவங்கியது. ஆரம்பித்த உடனேயே தமிழ் நாட்டில் உள்ள பட்டு நூல் உற்பத்தியாளர்கள் இணையத்தில் வைக்கும் கோராவிற்கு அதன் விலையில் 80 சதவிகிதம் முன்பணமாகவும் மீதி தொகை கோரா விற்பனை ஆனவுடன் உறுப்பினர்களுக்கு வழங்கி வந்தது. ஆரம்ப காலத்தில் இணையத்திற்கு நிதி வசதி ஏதுமின்றி உறுப்பினர்களின் பங்குத் தொகையை மட்டுமே வைத்து செயல்பட ஆரம்பித்தது.

காஞ்சிபுரம் மத்திய கூட்டுறவு வங்கியினர் உறுப்பினர்களின் பங்குத் தொகையை ஆதாரமாக வைத்து ரூபாய் பதினெட்டு இலட்சம் காசுக் கடன் வழங்கியது. இதனை படிப்படியாக ரூபாய்ஐம்பது

(5-ம் பக்கம் பார்க்க)









## சிறுதொழில் வளர்ச்சிப் பணியில் சிட்கோ

திரு.
**டி. கங்கப்பா** இ. ஆ. ப.
நிர்வாக இயக்குநர் - சிட்கோ

தொழில்அபிவிருத்திக்கு முக்கியமாகசிறுதொழில்அபிவிருத்திக்கு, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட ஆரம்ப காலத்திலிருந்து முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வருகின்றது. இந்தக் கொள்கைக்கு இணங்க, தொழில் நடத்துவதற்கான எல்லா வசதிகளையும் கொண்ட தொழிற்பேட்டைகள் அமைத்தல் என்ற திட்டம் நாட்டின் தொழில் வளத்திற்குக் கணிசமான அளவில் உதவி இருக்கின்றது இவ்வகை தொழில்பேட்டைகளில் கட்டப்படும் தொழிற் கூடங்கள் சம்பந்தப்பட்ட அரசு இலாகா விதிகளின் படி கட்டப்படுவதால் அந்தந்த இலாகாவிடமிருந்து பெற வேண்டிய உரிமங்கள் சுலபமாகப் பெற முடிவதுடன் தொழில் புரிவோரின் மூலதனம் தொழிற்கூட கட்டிடங்களில் முடக்கப்படுவது தவர்க்கப்படுகின்றது.

தொடக்க காலத்தில் இருந்த, குறைந்த வாடகையில் தொழிற் கூடங்கள் ஒதுக்குதல் எனும் முறை, பின்பு சுலப தவணைகளில் தொழிற்கூடங்களின் கிரயத்தைச் செலுத்தி நாளடைவில் தொழிற்கூடங்களைத் தங்களுக்கு சொந்தமாக்கிக் கொளளும திட்டம் நடைமுறையில் வந்துள்ளது. வாடகையின் அடிப்படையில் தொழிற்பேட்டைகளில் உள்ள தொழிற்கூடங்களை ஏற்றுக் கொண்ட தொழிலதிபர்கள், அவர்கள் வளர்ச்சியுற்ற பின் தங்கள்தேவைக்கேற்ப கட்டிடங்களை அமைத்துக்கொள்வதற்கு ஏற்றவாறு மேம்படுத்தப்பட்ட மனைகள் எனும் திட்டம் நடைமுறைபடுத்தப்பட்டது.

தற்போது 'சிட்கோ' எனப்படும் தமிழ்நாடுசிறுதொழில் வளர்ச்சி நிறுவனத்தின் கீழ் மாவட்டத்திற்கு இரண்டு அல்லது மூன்று தொழிற்பேட்டைகள் என்ற கணக்கில் தமிழ்நாட்டில் சிட்கோவின் மேற்பார்வையில் 47 தொழிற்பேட்டைகள் இயங்கி வருகின்றன. இவை தவிர தமிழ்நாடு தொழில் இலாகா இயக்குநர் மற்றும் செராமிக் கார்ப்பரேஷன் கீழ் 12 தொழிற்பேட்டைகள் இயங்கி வருகின்றன.

மேலே குறிப்பிட்ட தொழிற்பேட்டைகள் மாவட்டத்தலைமை இடங்களிலோ அல்லது முக்கிய நகரங்களிலோ தேவைக்கேற்ப அமைக்கப்பட்டு வந்திருக்கின்றன. சென்ற இரண்டு ஆண்டுகளுக்கு மேலாக சிறு தொழில்களை கிராமங்களிலும் பரப்ப வேண்டும் என்றுதிட்டமிட்டு சிட்கோ சின்னஞ்சிறு தொழிற்கூடங்களைத் தமிழ் நாட்டில் 84 இடங்களில்இது காறும் 1344 தொழிற்கூடங்களைக் கட்டி வந்துள்ளது. இவ்வகைத் தொழிற்கூடங்கள் சுயவேலை வாய்ப்பை பலருக்கு ஏற்படுத்தித் தந்துள்ளன.

இந்தத் தொழிற்கூடங்களைக் கட்ட குறைந்த வட்டிக் கடன், மானியம், பங்குத்தொகை போன்றநிதி ஆதாரங்களைப் பெற சிட்கோ முயற்சியெடுத்ததன் பயனாகத்தொழில் விளைஞர்களுக்குத் திருப்பித்தரவேண்டிய கடன் பளு கணிசமாகக் குறைக்கப்பட்டது. ஆரம்பக் காலத்தில் பொதுவான தேவைக்கேற்ப அமைக்கப்பட்ட இந்த சின்னஞ்சிறு தொழிற்கூட வடிவமைப்பானது நாளடைவில் குறிப்பிட்ட தொழில்களுக்கு ஏற்ப மாற்றி அமைக்கப்பட்டது. இந்தவகையில் தீப்பெட்டி தொழிலுக்கு ஏற்ப மாற்றி அமைக்கப்பட்டவடிவமைப்பு ஒன்றாகும். ராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களில் பரம்பரைத் தொழிலாக இருந்து வருகிற குறைந்த மூலதனத்தில் அதிக வேலைவாய்ப்பைகொடுக்க வல்ல, தீப்பெட்டி உற்பத்தி செய்யும் தொழிலை மற்ற மாவட்டங்களிலும் இது போன்ற அமைப்புகளை ஏற்படுத்தி வேலை வாய்ப்புகளை அதிகரிக்க இத்திட்

(5-ம் பக்கம் பார்க்க)

## பட்டு வளர்ச்சித் துறை..

(4 ம் பக்கத் தொடர்ச்சி)

இலட்சமாக உயர்த்தப்பட்டுள்ளது.

மத்தியபட்டுவாரியத்தினர் விலைக் கட்டுப்பாடு திட்டத்தின் கீழ் இவ்விணையத்தை ஒருபிராந்திய கச்சாபொருள் வங்கியாக அங்கீகரித்துள்ளனர். இத்திட்டத்தை செயல்படுத்த அவர்கள் ரூபாய் பதினைந்து இலட்சம் குறைந்த வட்டிக் கடனாக அளித்துள்ளனர். கோரா விலைக் கட்டுப்பாடுத் திட்டம் 1-10-80ல் இருந்து அமுலில் இருந்து வருகிறது.

மாநில அரசினர் ரூபாய் 1.70 இலட்சம் பங்குத் தொகை உதவியாகவும், ரூபாய் ஐந்து இலட்சம் ஆதார நிதியாகவும் அளித்துள்ளனர்.

இணையம் காஞ்சிபுரத்தில் அகதிகள் புனர்வாழ்வு வங்கியிலிருந்து ரூபாய் ஒரு இலட்சத்து ஒருபதினாயிரம் கடன் உதவி பெற்று ஒரு நபர்கள் கொண்ட எட்டு தாயகம் திரும்பியோர் குடும்பங்களை நிரந்தர வேலைவாய்ப்பு கொடுக்கும் வகையில் 36 பகதிர திறன்கொண்ட ஒரு பட்டு முறுக்காலையை நிறுவியுள்ளது.

இணையம் பட்டுத் தொழிலில் விற்பனைத்தேவைகளை பூர்த்தி செய்யும் வகையில் முதல் ஆண்டிலேயே சேலம் மற்றும் கும்பகோணத்தில் கிளைகளும், இரண்டாம் ஆண்டில் ஆரணி, மற்றும் மதுரையிலும கிளைகளை துவங்கியுள்ளது.

தற்சமயத்தில் உலக அளவில் இருந்து வரும் பட்டுத் தொழிலின் நிலை நம்நாட்டில் பட்டுத் தொழிலின் துரித வளர்ச்சிக்கு மிகவும் சாதகமாக உள்ளது. சில ஆண்டுகளுக்கு முன் உலக பட்டு உற்பத்தியில் 5-வது இடம்வகித்த நம்நாடு இன்று சீனா மற்றும் ஜப்பானுக்கு அடுத்தப்படியாக 3-ம் இடத்திற்கு உயர்ந்துள்ளது. இதே நிலையில் தமிழ்நாடு சில ஆண்டுகளுக்கு முன் குறிப்பிடத் தக்க பட்டுநூல் உற்பத்தி இல்லாதிருந்த போதிலும் இன்று கர்நாடக மாநிலத்திற்கு அடுத்தப்படியாக மேற்கு வங்காளம், ஜம்மு-காஷ்மீர் மாநிலங்களைப் பின் தள்ளிவிட்டு 2-ம் இடத்தைப் பிடித்துக் கொண்டுள்ளது.

தமிழ்நாட்டில் பட்டு தொழில் வளர்ச்சி இத்தொழிலில் உற்பத்தியாகும் விற்பனைப் பொருள்களுக்கு ஏற்படுத்தப்படும் நிரந்தர விற்பனை வசதிகளையே சார்ந்திருக்கும். இந்த வகையில் தமிழ்நாடு மாநில பட்டு உற்பத்தியாளர் தொழிற் கூட்டுறவு விற்பனை இணையம் நிறுவப்பட்ட தேதியிலிருந்து ஒரு முக்கிய பணியினை ஆற்றி வருகிறது. இணையம் நிறுவப்பட்ட கடந்த 3 ஆண்டுகளில் பட்டுநூல் விற்பனை விலையில் குறிப்பிடத் தக்க ஏற்றத் தாழ்வு இல்லாது இருந்தது என்பதே இதற்குச் சான்றாகும். இணையம் கோரா விற்பனையில மட்டுமல்லாமல் பாவு, மற்றும் ஊடைப் பட்டு உற்பத்தி மற்றும் விற்பனைசெய்வதிலும அக்கரை கொண்டுள்ளது. இணையம் நிறுவப்பட்டதின் பயனாக நாட்டிலே முதன் முறையாக அரசு பட்டுக் கூடு அங்காடிகளில பட்டுக் கூடுகளின் தரத்தின் அடிப்படையில் கூடுகளின் விலை நிர்ணயிக்கப்பட்டு வருவது ஒரு அரிய சாதனையாகும். இவ்விணையத்தில்பட்டுத்தொழிலில் கிடைக்கக்கூடிய உப பொருள்களின் விற்பனையும் மேற்கொள்ள திட்டமிடப்பட்டுள்ளது.

## சிறு தொழில் வளர்ச்சிப் பணியில்...

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

டம் உதவியுள்ளது.

அடுத்த படியாக விவசாயத்தையே பெரும்பாலும் நம்பி வாழ்க்கை நடத்தும் மக்களுக்கு அதிக வேலை வாய்ப்பையும் அதன் வாயிலாகக் கூடுதல் வருவாயையும் ஏற்படுத்தித்தர, முசுக்கொட்டை வளர்க்கும திட்டம்பரவலாக்கப்பட்டது இந்தத் திட்டத்தின் அடிப்படையில் பட்டு இழை தயாரிக்கும் அமைப்புகளை ஏற்படுத்த வேண்டியதை உணர்ந்த பட்டு வளர்ச்சித் துறை இயக்குநர், சின்னஞ் சிறு தொழிற் கூடங்களின வடிவமைப்பை உருவாக்கித் தந்தார்கள். இந்தத் திட்டத்தின் அடிப்படையில் முதன் முதலாக தாராபுரத்தில் சின்னஞ்சிறு தொழிற்கூடங்கள் சிட்கோவினால் கட்டப்பட்டன.

இன்று மாண்புமிகு தமிழக ஊரகத் தொழில்துறை அமைச்சர் அவர்களால் மாண்புமிகு தமிழகப்போக்குவரத்துத்துறை அமைச்சரின் தலைமையில் துவக்கப்படும் இந்த தாராபுரம் தொழிற் பேட்டையில் மொத்தம் 32 தொழிற்கூடங்கள் உள்ளன. இவற்றுள் 18 தொழிற் கூடங்கள் பட்டு இழை தயாரிப்புக் கூடங்களாகும். மீதமுள்ள 14 தொழிற் கூடங்கள் வேறு சிறுதொழில்கள் நடத்தும் தொழிற் கூடங்களாகும். இந்தத் தொழிற் பேட்டையின் தோன்றல் தமிழ்நாடு தொழில் முதலீட்டுக்கழகம், சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா சிட்கோ ஆகிய அமைப்புகளின் கூட்டு முயற்சியாகும். ஊரின் மையப்பகுதியில் இருக்கும் இந்தத் தொழிற்பேட்டை 1-68 ஏக்கர் நிலத்தில் அமைக்கப்பட்டுள்ளது. இந்தத் திட்டத்திற்கான நிலம் மற்றும் கட்டிடங்களுக்கு உண்டான செலவு ரூ. 7.80 இலட்சம் ஆகும். தொழிற்கூடங்களில் உள்ள இயந்திரங்களின் மதிப்பு சுமார் 5 இலட்சம் ஆகும். இந்தத் தொழிற் பேட்டை சுமார் 250 பேர்களுக்கும் நேரடியாக வேலை வாய்ப்பு அளிக்கும் என எதிர்ப்பார்க்கப் படுகின்றது. இந்தத் தொழிற்பேட்டையில்ஆண்டு உற்பத்தியின் மதிப்பு சுமார் 15 இலட்சம் இருக்கும் என எதிர்ப்பார்க்கப்படுகின்றது.

இன்று பட்டு இழை தயாரிப்பதற்கேற்ப தாராபுரத்தில் அமைக்கப்பட்டுள்ள 18 தொழிற்கூடங்கள் நீங்கலாக தர்மபுரி மாவட்டத்தில் 91 கட்டிடங்களின் கட்டுமானப் பணிகள் பல்வேறு நிலைகளில் உள்ளன.

தமிழகம் வந்து தொழில் துவங்க

## குஜராத் அதிபர்கட்கு திருநாவுக்கரசு அன்பழைப்பு

**ஆமதாபாத், அக். 17- தமிழகத்தில் புதிய தொழில்களைத் துவக்க முன் வருமாறு ஆமதாபாத்தில் தொழிலதிபர்களிடையே பேசுகையில் தமிழக தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு கேட்டுக் கொண்டார்**

குஜராத் மாநிலத் தலைநகரான ஆமதாபாத் நகரில், குஜராத் மாநில வர்த்தகர் கழகம், மற்றும் உற்பத்தியாளர் சங்கம் தொழிலதிபர்கள ஆகியோர்களின கூட்டத்தில், தமிழக தொழில் துறை அமைச்சர் திருநாவுக்கரசு கலந்து கொண்டு பேசினார்.

நிகழ்ச்சியில் பேசுகையில் அமைச்சர் திருநாவுக்கரசு, தமிழ்நாட்டில் புதிய தொழில்களைத் துவக்க முன் வருமாறு குஜராத மாநில தொழிலதிபர்களை கேட்டுக்கொண்டார்.

### அதிகாரிகளுடன் சந்திப்பு

அமைச்சர் திருநாவுக்கரசு பின்னர் பரோடா சென்று அங்குள்ள ரசாயன தொழிற்பேட்டையைச் சுற்றிப் பார்த்தார்.

குஜராத் மாநில தொழில்துறை அதிகாரிகளைச் சந்தித்து பல்வேறு தொழில் வளர்ச்சித் திட்டங்கள் குஜராத்தில் செயல்படும் விதம்குறித்து கேட்டறிந்தார்.

### அண்ணா பிறந்த நாள் விழா

பம்பாயில் உள்ள வர்த்தகப் பகுதியை அமைச்சர் திருநாவுக்கரசு பார்வையிட்டார்.

முன்னதாக ஆமதாபாத் நகரில் எம். ஜி. ஆர். மன்றத்தின் சார்பில் நடந்த அண்ணா பிறந்தநாள் விழாவில் பங்கேற்றார்.

ஆமதாபாத் நகரில் உள்ள தமிழர்கள் ஏராளமானோர் இந்நிகழ்ச்சியில் பங்கேற்றனர்.

## அண்ணா நகரில் அண்ணா பிறந்தநாள் விழா

சென்னை, அக். 17— சென்னை 80வது வட்டம் அண்ணாநகரில் பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழா வரும் 18ந் தேதி காலை 9 மணிக்கு இரா. பாண்டியன தலைமையில் சைக்கிள் ஊர்வலத்துடன் கொண்டாடப்படுகிறது.

விழாவில் அமைச்சர் டாக்டர் அண்டே, கு. க. செல்வம், கோதண்டராமன், தி. நகர் மூர்த்தி, துவாரகநாதன், கோ.சு. மாறன், ஜெயராமன், டி. எஸ் மூர்த்தி, மணிமாறன், வெங்கடேசன, தமிம், குமாரகுருப், கம்சுதீன், வி. கே. மூர்த்தி, சங்கர், ஆதிராஜ், என. குமார், செல்வம், வேணுகோபால் ஆகியோர் கலந்துகொள்கிறார்கள்.

பல்வேறு இடங்களில் கழக கொடி ஏற்றி ஏழைகளுக்கு உணவளித்து சைக்கிள் ஊர்வலம்நடத்துகிறார்கள்.

## துறைமுகம் பகுதியில் அண்ணா பிறந்தநாள் விழா நிகழ்ச்சிகள்

சென்னை, அக் 17 - துறைமுகப் பகுதியில் பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழாவும் கழக 10-ம் ஆண்டு துவக்கவிழாவும் பல இடங்களில் சிறப்பாக கொண்டாட ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது

சென்னை துறைமுகப் பகுதியில் நாளை 18 ந் தேதி காலை 11 மணிக்கு முத்து கிருஷ்ணன் தெருவில் பி. பாபு தலைமையிலும் காலை 11.30 மணிக்கு குப்பையர் தெருவில் டி. மணியப்பன் தலைமையிலும காலை 11.45 மணிக்கு வெங்கய்யர் தெருவில் குமார் தலைமையிலும், அமைச்சர் எஸ் என். ராஜேந்திரன் உணவு வழங்குகிறார்.

விழாவில் மதுசூதனன். ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி, மண்ணடி கிருஷ்ணமூர்த்தி எம். பி. ஜியாவுதீன், எம். பி ஆனந்தன், கு. கஜேந்திரபாபு, எஸ். பி. டி. விஜயன், எல். குமார், கணேசன் கா. சம்பத், தட்சிணா மூர்த்தி, ஜெயராமன், கோகுல்ராம் ஆகியோர் கலந்து கொள்கின்றனர்.

18-ந் தேதி காலை 8 மணிக்கு தங்கசாலை விஸ்வா ஓட்டல் அருகில் ஜெயகுமார் தலைமையிலும், காலை 9 மணிக்கு பழவக்காரத் தெருவில் ஆதிசேஷன் தலைமையிலும், காலை 9-30 மணிக்கு சாலை விநாயகர் கோயில் தெருவிலும் அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் கழககொடியேற்றிவைத்து இனிப்பு வழங்குகிறார்.

எஸ்.என். ராஜேந்திரன் திறந்து வைத்து கொடியேற்றுகிறார்.

சென்னை 48வது வட்டம் தையப்பமுதலித் தெருவில் 18ந் தேதிகாலை 10மணிக்கு அஜிஸ் தலைமையிலும் 10-30 மணிக்கு ஆசீர்வாதபுரத்தில் எஸ். வி. ரவி தலைமையிலும் அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் உணவு வழங்குகிறார்

20ந் தேதி செவ்வாய் காலை 10 மணிக்கு ஆண்டர்சன் தெருவில் கே. மோகன் தலைமையில் அமைச்சர் ராஜாமுகமது கழகக் கொடியேற்றி வைத்து உணவு வழங்குகிறார். இ. மதுசூதனன், ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி, மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, எம்.பி. ஜியாவுதீன், கே. எல்லப்பன், கு. கஜேந்திரபாபு, மற்றும் பலர் கலந்து கொள்கின்றனர்.

### ஒளிவிளக்கு எம். ஜி. ஆர். மன்ற திறப்பு

18 ந்தேதியன்று காலை 12 மணிக்கு பத்மநாபத் திரையரங்கு அருகே ஏ. பரமசிவம் தலைமையில் ஒளிவிளக்கு எம். ஜி. ஆர். மன்றத்தை அமைச்சர்

## நரபலி: 2 பேருக்கு ஆயுள் தண்டனை

திருச்சி, அக். 17— வேப்பந்தட்டை நரபலி வழக்கில் எதிரிகள் இருவருக்கும் ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது. வீட்டு மனை விருத்திக்காக நல்லுசாமி, ராஜேந்திரன் ஆகிய இரு சிறுவர்களை நரபலியிட்டதாக பள்ளி ஆசிரியர் வேலுசாமி, வெட்டியான் பழனிமுத்து ஆகியோர் மீது வழக்குத் தொடரப்பட்டது.

இந்த இருவருக்கும் திருச்சி செசன்ஸ் நீதிபதி ஆர். மாணிக்கம் ஆயுள் தண்டனை விதித்துத் தீர்ப்பளித்தார்.

கலெக்டர் பாண்டே தகவல்:

## ராமநாதபுரத்தில் அரிஜனங்களுக்கு இலவச உழவுமாடு

மதுரை, அக் 17— ராமநாதபுரம் மாவட்டத்தில் இரண்டு தாலூகாக்களில் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்களுக்கு இலவசமாக உழவு மாடுகள் வழங்கப்படும் என்று மாவட்ட கலெக்டர் எச். எம். பாண்டே கூறினார்.

ராமநாதபுர மாவட்ட கலெக்டர் எச். எம். பாண்டே கூறியதாவது:-

ராமநாதபுர மாவட்டத்தில் திருவில்லிப்புத்தூர், ராமநாதபுரம், (ராமேஸ்வரம் துணைவட்டம் உள்பட) இரண்டு தாலுக்காக்களில் உள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த விவசாயிகளுக்கு இலவசமாக உழவுமாடுகளும், விவசாயக் கருவிகளும் வழங்கும திட்டம் செயல்படுத்தப் படுகிறது.

இந்தத் திட்டத்தின் கீழ் உழவுமாடுகள் இலவசமாகப் பெறுவதற்கு தகுதியுள்ள ஆதி திராவிட வகுப்பைச் சேர்ந்த விவசாயிகள். ஆதி திராவிட கிறிஸ்துவர்கள் பழங்குடியினர் ஆகியோர் விண்ணப்பிக்கலாம்.

விண்ணப்பிப்பவர்கள் சொந்தமாக ஒரு ஏக்கர் புஞ்சை நிலம், அல்லது அரை ஏக்கர் நஞ்சை நிலம் உள்ளவராக இருக்க வேண்டும். அல்லது தொடர்ந்துஐந்து ஆண்டுகளுக்கு ஏதாவது ஒரு நிலச்சொந்தக்காரரிடம் நிலம் உழவடை செய்யும் குத்தகைதாரராக இருக்க வேண்டும்.

ஏற்கனவே இத்திட்டத்தின் கீழ் இலவசமாக உழவு மாடுகள் பெறாதவராக இருகக வேண்டும்.

திருவல்லிபுத்தூர் வட்டத்தைசேர்ந்தவிண்ணப்பதாரர்கள் திருவல்லிபுத்தூரில் உள்ள ஆதிதிராவிட நல தனித்தாசில்தாருக்கும்ராமநாதபுரம், ராமேஸ்வரம் வட்டத்தைச் சேர்ந்தவர்கள் ராமநாதபுரத்தில் உள்ள ஆதிதிராவிட நலதனித்தாசில்தாருக்கும் விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு கலெக்டர் எச். எம். பாண்டே கூறினார்.

### திருத்தம்

நேற்றைய (16-ம்தேதி) அண்ணா நாளிதழில் "கருணாநிதி ஆட்சிதனில் ஊழலோ ஊழல்" என்ற செய்தியில் ராயப்பேட்டை மருத்துவமனையில் 1977-ம் ஆண்டு இருதய சம்பந்தமான ஓர் கருவியை ரூ. 19 ஆயிரத்துக்கு வாங்கப்பட்டது என்பதை 1971-ம் ஆண்டு என்று திருத்தி படிக்கும படி கேட்டுக்கொள்கிறோம்.

—ஆசிரியர்

## அனந்தநாயகி தலைமையில் தேவர் பேரவை

சென்னை, அக். 17— தமிழ்நாடு தேவர் பேரவையின் தலைவராக காங்கிரஸ் (எஸ்) தலைவர் டி. என். அனந்தநாயகி தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார் டாக்டர் வீ ராம.வீ கிருஷ்ணன் பொதுச்செயலாளர், வி. யூ. பாண்டியன், பாண்டியநேசன். சக்தி பாலசந்திரன் மற்றும் இருவர் துணைச் செயலாளர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

நிருபர்கள் கூட்டத்தை தேவர் பேரவைகூட்டியது. வி.யூ. பாண்டியன் வரவேற்றுப் பேசினார்.

அனந்தநாயகி பேசுகையில் "பிற்பட்டவருக்கும் தாழ்த்தப்பட்டவர்களுக்கும் உதவுவதுதான் அடிப்படை நோக்கம், பிற்பட்ட நிலையில் உள்ள மக்களுக்கு இந்தப் பேரவை உதவும். பேரவையின் மாநாடு நவம்பர் மாதம் மதுரையில் நடக்கிறது. கலவித் துறையில் இநத சமூகத்தினர் வளர்ச்சி பெற திட்டங்களைத் தீட்டி செயல் செயல்படுவோம்" என்று கூறினார்.

ரூ 25 ஆயிரம் மதிப்புள்ள

## கடத்தல் சந்தனக் கட்டைகள் பறிமுதல்

சென்னை, அக். 17— திருச்சி மாவட்டக் காடுகளிலிருந்து கடத்திவரப் பட்டதாகக்கூறப்படும், 25 ஆயிரம்ருபாய்மதிப்புள்ளசந்தனக்கட்டைகளை பல்லாவரம் அருகே போலீசார் பறிமுதல் செய்தனர்.

லாரி ஒன்றில் கொண்டு வரப்பட்ட இந்த சந்தனக் கட்டைகளை இறக்கிக் கொண்டு இருக்கும்போது போலீசார் 3பேரைக் கைது செய்து சந்தனக் கட்டைகளையும் பறிமுதல் செய்தனர்.



Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras -600 029

Editor: E. PARASURAMAN

# அண்ணா






திருப்பத்தூர் சட்டமன்ற இடைத் தேர்தலில் வெற்றி பெற்ற அருணகிரி, புரட்சித்தலைவா பேனர் வைக்கப்பட்ட திறந்த ஜீப்பில் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டகாட்சி.

## கலாச்சாரத்தின்படி தரமான படங்களை தயாரியுங்கள்

### ஜனாதிபதி வேண்டுகோள்

சென்னை டிச. 2— நமது கலாச்சாரத்தை பிரதிபலிக்கத் தக்க வகையில் தரமான திரைப் படங்களைத் தயாரிக்குமாறு திரைப்படத்துறையினரை குடியரசுத் தலைவர் சஞ்சீவரெட்டி கேட்டுக் கொண்டார்.

சென்னை பல்கலைக்கழக நூற்றாண்டுவிழா மண்டபத்தில் பேசும் திரைப்படப்பொன் விழா நடந்தது. விழாவை குடியரசுத் தலைவர் சஞ்சீவரெட்டி தொடங்கி வைத்தார். முதல்வர் புரட்சித்தலைவர் தலைமை தாங்கினார். குடியரசுத் தலைவர் சஞ்சீவ ரெட்டி பேசுகையில் கூறியதாவது:—

சென்னைக்கு வருவது என்பது என்னைப் பொறுத்தவரை சொந்த வீட்டுக்கு வருவதுபோன்றதாகும். நான் அடையாறில் உள்ள உயர்நிலைப் பள்ளியில் கல்வி கற்றேன். 1946-ல் இங்கே உள்ள சட்டசபையில் உறுப்பினராக இருந்தேன். ஒருங்கிணைந்த சென்னை மாகாணத்தில் அமைச்சராகவும் இருந்திருக்கிறேன். சென்னை எனக்குப் பழகிப்போனவர். திரைப்படக் கலைஞர்கள் பலபேர் எனக்குப் பழக்கமானவர்கள்.

## பாராட்டு

திரைப்படத்துறை இந்த அளவுக்கு வளரக் காரணமான அனைவருக்கும் பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

1927-ல் அமெரிக்காவில் பேசும்படம் தயாரித்தார்கள். இந்தியாவில் அம்முறையைப் பின்பற்றி 1931 மார்ச் 14ந் தேதி "ஆலம் ஆரா", என்ற படத்தை திரையிட்டனர். இப்போது திரைப்படம் என்பது மக்களின அன்றாட வாழ்க்கையில் ஓர் அங்கமாகி விட்டது.

1980-ம் ஆண்டு தயாரிக்கப்பட்ட 742 திரைப்படங்களில் 605 படங்கள் சமூகக் கொள்கை அடிப்படையானது.

படவசூலுக்காகவர்த்தக ரீதியான படங்களைத் தயாரிக்கும் பழக்கம் துரதிர்ஷ்டமானது. நமது கலாச்சாரத்தை பிரதிபலிக்கும் தரமானப் படங்களைத் தயாரிக்கக் கேட்டுக் கொள்கிறேன்.

எனக்குத் தெலுங்குப் படஉலகம் பற்றிதெரியும். 30 ஆண்டுகளுக்கு முன் வந்த மல்லேஸ்வரி சிறந்த படமாக இருந்தது. சமீப காலத்தில் வெளியான சங்கராபரணம் படமும் சிறப்பாக இருந்தது.

இவ்வாறு ஜனாதிபதி சஞ்சீவரெட்டி கூறினார்.

### கவர்னர்

கவர்னர் சாதிக் அலி பேசுகையில் "திரை உலகுக்கு தென் இந்தியா செய்துள்ள வியத்தகு சேவை பாராட்டுக்குரியது. மக்களின் அன்றாட சமூக வாழ்க்கையில் திரைப்படம் ஓர் அங்கமாகி விட்டது. குறைந்த செலவில் நல்ல பொழுதுபோக்கு அம்சமாக திரைப்படங்கள் உள்ளன. நல்ல பழக்கங்கள், ஒற்றுமை உணர்வு ஆகியவற்றைப் பரப்புவதற்கான சிறந்த சாதனமாகவும் திரைப்படங்கள் உள்ளன என்று கூறினார்.

ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்றுவரும்

## ம.பொ.சி.யை இலங்கை அமைச்சர் பார்த்தார்

சென்னை, டிச. 2— சென்னை பொது மருத்துவ மனையில் 'அல்சர்' நோய் காரணமாக சிகிச்சை பெற்று வரும் சட்டமேலவைத் தலைவர் ம.பொ.சி.யை இலங்கை அமைச்சர் ராஜதுரை சந்தித்து உடல் நலம் விசாரித்தார்.



நாடாளுமன்றத்தில்

## தி.மு.க.வின் போக்கு கழகம் கண்டனம்: சபை ஸ்தம்பித்தது

புதுடெல்லி, டிச. 2— மாநிலங்களவையில் தி. மு. க.வினரின் போக்குக்கு கழக உறுப்பினர்கள் கடும்கண்டனம்தெரிவித்தனர். இதையொட்டி 20 நிமிட நேரம் சபையின் அலுவல்கள் தடைபட்டன.

தி.மு.கவினர் எழுப்பிய ஒரு பிரச்சினையையொட்டி மாநிலங்களவையில் கழக உறுப்பினர்கள் கடும் கண்டனம் தெரிவித்தனர்.

இதனால் சபையில் கூச்சல் குழப்பம் ஏற்பட்டது. 20 நிமிடம் சபை அலுவல்கள் தடைபட்டன.

இதுபற்றிய விவரம் வருமாறு:-

கடந்த வாரம் சென்னையில் கருணாநிதியின் வீட்டில் நடந்த சோதனை பற்றி மாநிலங்களவையில் தி. மு. க. உறுப்பினர் வி.கோபால்சாமி கூறினார்.

உடனே கழக உறுப்பினர் யு. ஆர். கிருஷ்ணன் எழுந்து இது மாநில சம்பந்தப்பட்ட விவகாரம். இதை இங்கு எழுப்ப எப்படி அனுமதிக்கலாம் என்று கூறி ஒழுங்கு பிரச்சினை கிளப்பினார்.

தி.மு.க. கோபால்சாமி அளித்த ஆவேசமான பதிலையொட்டி கழக உறுப்பினர்கள் மோகனரங்கம், ஆர். ராமகிருஷ்ணன், நூர்ஜகான்ரசாக் ஆகியோர் பதிலளித்தனர்.

சபையின் நேரம் 20 நிமிடம் வீணானதை யொட்டி இருதரப்புஉறுப்பினரையும் இனிமேல்இந்த கருத்துபற்றி பேசுவதற்கு அனுமதிக்கப் போவதில்லை யென்று சபையின் துணைத் தலைவர் ஷியாம்லால் யாதவ் கூறினார்.

அத்தகைய முடிவை எடுக்க வேண்டாம் என்று எதிர்க்கட்சிகளைச் சேர்ந்த உறுப்பினர்கள் சபை துணைத் தலைவரை கேட்டுக் கொண்டனர்.

நான் எல்லோரிடமும் நியாயமாகவே நடந்து கொள்கிறேன். தொடர்ந்து அப்படி இருப்பேன். ஆனால் உறுப்பினர்கள் மற்றவர்களது கருத்தையும் பொறுமையாக கேட்டுக்கொள்ள வேண்டும் என்று யாதவ் கூறினார்.

பாகிஸ்தான் ஆயுத குவிப்பு:

## இந்திய நடவடிக்கை பற்றி தகவல்

புதுடெல்லி, டிச. 2— அமெரிக்கா பாகிஸ்தானுக்குநவீனபோர்விமானங்கள் அளிப்பது உட்பட பாகிஸ்தானின் ஆயுத குவிப்பு பற்றி இந்தியா அறிந்துள்ளது என்றும், இதற்கு ஏற்றவாறு இந்தியாவும் தக்க பாதுகாப்பு நடவடிக்கைகளை எடுத்து வருவதாகவும் மாநிலங்களவையில் தெரிவிக்கப்பட்டது.

கவன சர்ப்பு தீர்மானம் ஒன்றுக்கு பதிலளிக்கையில் இதனை பாதுகாப்பு துறை துணையமைச்சர் சிவராஜ் பட்டீல் தெரிவித்தார்.

## விமான விபத்தில் 178 பேர் மரணம்

தென்பிரான்ஸ், டிச.2— யூகோஸ்லேவியாவிலிருந்து 178 பயணிகள் விடுமுறை பயணமாக சென்ற விமானம் ஒன்று பிரஞ்சு மத்திய கடல் தீவு அருகே மலைமீது மோதியது. அதில் பயணம் செய்த அனைவரும் மரணமடைந்தனர். மோசமான வானிலை காரணமாக இந்த விமானம் அஜெய்க்கோ விமானநிலையத்தில் இறங்க முயன்றபோது இவ்விபத்து நடைபெற்றது.

இறந்த 178 பேரில் 3 குழந்தைகளும், 8 விமான சிப்பந்திகளும் பயணம் செய்ததாக போலீசார் தெரிவித்தனர். உயர் அதிகாரிகளும், போலீசாரும் விபத்து நடந்த இடத்திற்கு விரைந்து சென்றுள்ளனர்.

மேலிட தடையை மீறி

## கேரள மாநிலத்தில் இ. காங்கிரசுடன் கூட்டணி அரசு

### எஸ். காங்கிரஸ் தீவிர முயற்சி

புதுடெல்லி. டிச. 2— மேலிட தடையை மீறி கேரள மாநிலத்தில் இந்திரா காங்கிரஸ் உதவியுடன் கூட்டணி அரசை அமைக்க எஸ். காங்கிரஸ் கட்சி தீவிரமாக முயன்று வருகிறது.

கேரளாவில்மார்க்சிஸ்ட் கட்சி தலைமையிலான கூட்டணி அரசு கவிழ்ந்ததைத் தொடர்ந்து அங்கு ஜனாதிபதி ஆட்சிஅமுலாக்கப்பட்டது தெரிந்ததே.

இப்போது எஸ். காங்கிரசும் (பவார்காங்கிரசும்) இந்திரா காங்கிரசும் சேர்ந்து கூட்டணி அரசு ஒன்றை அமைப்பதற்கான முயற்சிகள் நடந்து வருகின்றன.

ஆனால் இந்திரா காங்கிரசுடன் இணைந்து கூட்டணி அரசு அமைப்பதற்கு எஸ். காங்கிரஸ் மேலிடம் எதிர்ப்புத் தெரிவித்திருக்கிறது.

இந்திரா காங்கிரசுடன் கூட்டுச்சேருவதால் எஸ். காங்கிரசுக்கு மதிப்புக் குறைவு ஏற்படும் என்றும் அதனால் எஸ்.காங்கிரசுக்கு மக்கள் மத்தியில் பாதிப்பு ஏற்படும் என்றும் எஸ். காங்கிரஸ் மேலிடம் எதிர்ப்புத் தெரிவித்திருக்கிறது. காங்கிரஸ் (எஸ்) செயற்குழுவும் இதை ஆதரித்து தீர்மானம் நிறைவேற்றியது.

ஆனால் இந்த தீர்

(6-ம் பத்தி பார்க்க)

[4-ம் பத்தி தொடர்ச்சி)

மானத்தை நிராகரித்துவிட்டு இந்திரா காங்கிரசுடன் கூட்டு சேர்ந்து மந்திரிசபை அமைக்க மாநில எஸ். காங்கிரஸ் தீவிரமாக முயலும் என்று கேரள (எஸ். காங்கிரஸ்) சட்டசபைத்தலைவர் உமன் சாண்டி தெரிவித்துள்ளார்.

எஸ். காங்கிரஸ் செயற்குழு கேரள மாநில அரசியல் சூழ்நிலையை நன்கு கண்டு அறியத் தவறி விட்டது, அரசியல் சக்திகள் இயங்கி வருவதை அது சரிவர உணரவில்லை என்றும் உமன்சாண்டி எஸ். காங்கிரஸ் தலைவர் சரத்பவாருக்கு எழுதிய கடிதத்தில் தெரிவித்துள்ளார்.

இந்த நிலையில் கேரள மாநிலத்தில் எஸ். காங்கிரஸ், இந்திரா காங்கிரஸ் ஆகிய கட்சிகளின் கூட்டணிஅரசுஏற்படலாம் என்று தெரிகிறது.

பல்கேரியா தயாரிக்க விரும்புகிறது

## இந்திரா பற்றிய திரைப் படம்

புதுடெல்லி, டிச. 2— பிரதமர் இந்திரா காந்தியைப் பற்றிய செய்திப் படம் ஒன்றினைத் தயாரிக்க பல்கேரியா நாடு விருப்பம் தெரிவித்துள்ளது.

இந்தத் தகவல் நாடாளுமன்ற கேள்வி நேரத்தில் தெரிவிக்கப்பட்டது.

பிரதமர் இந்திராகாந்தி பற்றியும், பல்வேறு துறைகளில் இந்தியாபெற்றுள்ள வளர்ச்சி பற்றியும். உலகப் பிரச்னையில் இந்தியா வகித்து வரும் பங்கு பற்றியும் படம் எடுக்க விரும்பியிருக்கிறார்கள்.

பிரதமர் இந்திராகாந்தி பல்கேரியா சென்றுஇருந்த போது அந்தப்படத்தை எடுக்க விரும்பும் டைரக்டரும், கதாசிரியரும் இந்திரா காந்தியைப் பார்த்தனர்.

இவர்கள் ஜனவரிமாதம் இந்தியா வந்து ஒருமாதம் தங்கி இருந்து படம் எடுப்பதுபற்றி ஆராய்வார்கள்.

## கோமேனி உடல் நலம் பாதிப்பு

லண்டன், டிச. 2— ஈரான் நாட்டின் ஜனாதிபதி அயதுல்லா கோமேனி (வயது 80) உடல்நிலை மிகவும் பாதிக்கப்பட்டுள்ளதாக டாக்டர்கள் தெரிவித்துள்ளனர்.

எந்த சமயத்திலும் கோமேனிக்கு எதுவும் நடக்கலாம். அதே சமயம் சில மாதங்கள் அவரது உடல் நலம் இப்படியே நீடிக்கலாம் என்றும் கூறப்படுகிறது.

## துணை சபாநாயகர் பாண்டியன் நாளை சென்னை திரும்புகிறார்

சென்னை, டிச. 2— ஆசிய வழக்கறிஞர்கள் மாநாட்டில் கலந்து கொள்ள ஜப்பான் சென்றிருக்கும் தமிழக துணை சபாநாயகர்பி.எச்.பாண்டியன் நாளை (3-ந்தேதி) இரவு சென்னை திரும்புகிறார்.

ஜப்பானில் உள்ள கோச்சி நகரில் ஆசிய வழக்கறிஞர்களின் முதலாவது மாநாடு நடந்தது.

13 நாடுகளைச் சேர்ந்த வழக்கறிஞர்கள் பங்கேற்ற இந்த மாநாட்டில் கலந்து கொள்வதற்காக இந்தியாவிலிருந்து மூவர் சென்றனர். அவர்களில் தமிழக சட்டப்பேரவைத் துணைத்தலைவர் பி. எச். பாண்டியனும்ஒருவர். கடந்த 10ந்தேதிவிமானம் மூலம் அவர் சென்னையிலிருந்து புறப்பட்டார்.

மாநாட்டில் கலந்து கொண்டு கருத்துரையாற்றிய பி.எச். பாண்டியன் ஆசிய வழக்கறிஞர்கள் சங்க செயற்குழு உறுப்பினராகத்தேர்ந்தெடுக்கப்பட்டார்.

மாநாட்டில் பங்கேற்றபின் வேறு சில இடங்களுக்கும் சென்று விட்டு பி.எச்.பாண்டியன நாளை (3-ந்தேதி) இரவு9மணிக்கு விமானம் மூலம் சென்னை திரும்புகிறார்.


Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029. Editor: B.PARASURAMAN